ஸ்ரீ: ஸ்து.

ஸ்ரீகாஞ்சி பிரதிவாதி பயங்கரம்

அண்ணங்கராசாரியர் ஸ்வாமி

அருளிச்செய்த

# 1. ஸ்ரீசைலேசமந்த்ர ப்ரபாவம்

மணவாள மாமுனிகள் வைபவம், ஸ்ரீசைலேசதயாபாத்ரத் தனியன் வைபவம், இதா பாத்ரத் தனியன் தோன்றிய வரலாறு முதலிய பல விசேஷங்கள் கொண்டது.

# 2. ஸ்ரீமத் வேங்கடநாத குரு ஸ்தோத்ரம்

வேதாந்த தேசிகனுடைய தனியனை ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய: என்னும் ச்லோகத்தின் அக்ஷரக்ரமத்திலே ஸ்வாமியின் பெருமைகளை விளக்குந் துதி நூல்.

இவை கிடைக்குமிடம் :—

க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்.

விலை ரூ. 1—0—0.

1952.

ஸ்ரீ

பேரருளாளன் பெருந்தேவித் தாயார் திருவடிகளே சரணம்.



ஸ்ரீகாஞ்சி ப்ரதிவாதி பயங்கர அண்ணங்கராசாரியர் ஸ்வாமி யெழுதிய

# ஸ்ரீ சைலேச மந்த்ரப்ரபாவம்.

ஸ்ரீ சைலேச தயாபாத்ரத் தனியன் சிறப்பும் மணவாளமாமுனிகளின் ப்ரபாவஸங்க்ரஹமும் முதலியன அடங்கிய இச்சிறு நூல் ஸ்ரீவைஷ்ணவ ரஸாயனமென்று கொள்ளத்தக்கது.

## 1. மணவாளமாமுனிகளின் வைபவச்சுருக்கம்.

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் பல ஆசிரியர்கள் விளங்கினும் மூவர் முக்கியமாகக் கொள்ளப்பட்டுள்ளார்கள். நம்மாழ்வாரும் நம்இராமாநுசனும் நம் மணவாளமாமுனிகளுமாவர். ஆனதுபற்றியே 'ஆழ்வார் திருவடிகளே சரணம்; எம்பெருமானார் திருவடிகளே சரணம்: ஜீயர் திருவடிகளே சரணம்' என்று ஸ்ரீ வைஷ்ணவவுலகம் நித்யமும் அநுஸந்தானம் செய்து வருகின்றது. முதன்மையான ஆசாரியர் நம்மாழ்வாரென்றும், இடையாசிரியர் எம்பெருமானார் [ஸ்ரீராமாநுஜர்] என்றும், கடையாசிரியர் மணவாள மாமுனிகள் என்றும் கொள்க.

இவர்களுள் நம்மாழ்வாருடைய பெருமையிற் காட்டிலும் ஸ்ரீராமாநுஜருடைய பெருமை மிக்கது. இவ்விருவர் பெருமையினும் மணவாளமாமுனிகளின் மேன்மை ஒப்புயர்வற்றது. ஆசார்ய பதவியை அலங்கரிப்பதற்கேற்ற நற்குணங்களனைத்தும் மாமுனிகள் திறத்து மாத்திரமே நன்கு குடிகொண்டிருந்தன வென்றால் இஃது இறையும் அதிசயோக்தியாகாது.

இப் பேராசிரியரின் சரிதை அமுதக் கடல் போன்று அளவுகடந்திருந்தாலும் அதினின்று சில திவலைகள் மாத்திரமே ஈண்டு அநுபவிக்கப்படுகின்றன. இது பக்தர்களுக்கு நித்யாநுஸந்தானமாகத் தகும்.

இவர் திருவவதரித்தது ஆழ்வார்திருநகரியில். இவரது திருத்தந்தையாரின் திருநாமம் திருநாவீறுடையபிரான்தாஸரண்ணர். கலியுகாதி நாலாயிரத்து நானூற்றெழுபத்திரண்டாவதான ஸாதாரண வருடத்தில் ஐப்பசித் திங்களில் திருமூல நன்னாளில் ஆதிசேஷனுடைய அம்சமாகவும் ஸ்ரீ ராமாநுஜருடைய அபராவதாரமாகவும் தோன்றினர்.

இங்ஙனே உலகுக்கெல்லாம் ஒருயிராகத் தோன்றிய திவ்யமூர்த்திக்கு ஸ்ரீ ரங்கநாதனுடைய திரு நாமத்தைச் சாத்த விரும்பிய பெரியார், 'அழகிய மணவாளன்' எனப் பெயரிட்டனர். அழகிய மணவாள நாயனார் எனச் சிறப்புத் திருநாமமாக வழங்கி வந்தது. சுக்லபக்ஷத்துச் சந்திரன்போல் கலைகள் நிரம்பி வளர்ந்து வருகின்றார். உபநயநம் முதலிய வர்ணோசித ஸம்ஸ்காரங்களும் அடைவே நடைபெற்றன. இராமபிரானும் கண்ணபிரானும் இயற்கையில் ஸர்வஜ்ஞர்களாயிருந்தும் லோக மரியாதைக்கிணங்க வஸிஷ்ட விச்வாமித்ர ஸாந்தீபநிகளிடத்திலே கலைகள் பயின்றவாறுபோல இவ்வாசிரியரும் உலக நடைக்கிணங்க நல்லாசிரியர் பக்கலிலே வேதங்களையும் வேதாங்கங்களையும் மற்றும் ஸகல சாஸ்த்ரங்களையும் ஓதியுணர்ந்து, "சொல்லார் தமிழொரு மூன்றும் சுருதிகள் நான்கும் எல்லையில்லாவறநெறி யாவுந் தெரிந்தவன்" என்னும்படி விளங்கினார். உசித காலத்தில் இல்லற வாழ்க்கையும் ஏற்று, "இருமுப்பொழுதேத்தி யெல்லை யில்லாத் தொன்னெறிக்கண் நிலை நின்ற தொண்டர்" என்னும்படியே விசிஷ்ட பரமைகாந்தியாக விளங்கிவந்தார்.

ஸ்ரீ வைஷ்ணவ பரமாசார்ய பரம்பரையில் பிள்ளைலோகாசார்யர் என்பவர் ஒரு பேராசிரியர். இவரே பரம கருணையோடு ரஹஸ்யப் பொருள்களை முதன் முதலாகப் பதினெட்டு நூல்கள் மூலமாய் வெளியிட்டருளின பெருவள்ளல். அவருடைய திருவடிகளில் நெடுநாள் பணிந்திருந்து அரும்பெரும் பொருள்களை நன்குணர்ந்தவரும் ஆழ்வார்களின் ஈரச் சொற்களிலே ஈடுபாடு காரணமாகத் திருவாய்மொழிப் பிள்ளையென்று சிறப்புத் திருநாமம் பெற்றவருமான திருமலையாழ்வாரென்கிற ஆசாரியரை யடிபணிந்து ஸத்ஸம்பிரதாயார்த்த நிதிகளைப் பெற்றார் இவ்வாசிரியர்.

அக்காலத்தில், திவ்வியப் பிரபந்தங்களின் சீரிய பொருள்களை யெடுத்துரைப்பார் மிகச் சிலரேயிருந்ததனால் இவ்வாசிரியர் தமிழ்வேத ரஹஸ்யப் பொருள்களின் பிரவசனத்தில் தலைமை பெற்று விளங்கவேணுமென்று ஆசைகொண்ட இவரது ஆசாரியர் [திருவாய்மொழிப் பிள்ளை] இவரை அக்கைங்கரியத்திலே திடமாக ஊன்ற வைத்தார். ஸம்ஸ்க்ருத வேத வேதாந்தங்களில் ஆழ்ந்து அவற்றின் உண்மைப் பொருள்களை உள்ளபடி யுணர்ந்தவர்களே தமிழ் வேதத்தை நன்கு நிர்வஹிக்க வல்லவர்களாதலால் இப்பேராசிரியர்க்கு இக்கைங்கரியம் கிடைத்தது மிகப்பொருத்தமாயிற்று.

முற்காலத்தில் ஆசாரியர்களனைவரும் தரிசன நிர்வாஹம் செய்துகொண்டு வீறுபெற்று எழுந்தருளியிருந்தவிடம் திருவரங்கம் பெரிய கோயிலேயாதலால் அந்தத் திருப்பதியில்வாழ்ந்து கொண்டு தர்சன ஸ்தாபனம் செய்தருளுமாறு தம் ஆசாரியரால் நியமிக்கப் பெற்ற இவ்வாசிரியர் நாளடைவில் திருவரங்கத் திருப்பதியிலே வந்து சேர்ந்து, அங்கு ஸ்ரீரங்கநாதனாலும் ஸகல ஸ்ரீ வைஷ்ணவர்களாலும் வெகுமானிக்கப் பெற்று அவ்விடத்தில் அடிபணிந்த சிஷ்யர்களுக்கு அரிய பெரிய அர்த்தங்களை அருளிச்செய்துகொண்டு வாழ்ந்து வந்தார். இல்லற வாழ்க்கையில் வெறுப்புற்றுத் துறவறம் பூண்டு 'மணவாள மாமுனிகள்' என்கிற திருநாமத்துடன் விளங்கி நின்றார். இப்படி இவர் உத்தமாச்ரமத்தை ஏற்றுக்கொள்வதற்கு முன்னமே வானமாமலையிலே மஹாஜ்ஞான நிதியாக எழுந்தருளியிருந்த அழகிய வரதர் என்பவர் பரம விரக்தியினாலே ஆச்ரமஸ்வீகாரஞ்செய்து ஸ்ரீராமானுஜ ஜீயரென்று திருநாமம் பெற்றிருந்தவர் இவ்வாசிரியர் திருவடிகளில் ஆச்ரயித்திருந்தார். அவரே தலைவரான சிஷ்யர். பிறகு, கோயிலண்ணன், பிரதிவாதிபயங்கரமண்ணன், எறும்பியப்பா முதலான பலபல மஹான்கள் சிஷ்யர்களாகப் பணிந்து இவரது பெருமைகளை வடமொழி தென்மொழி நூல்களினால் வெளியிட்டு உய்ந்து போந்தார்கள்,

அத்தகைய சிஷ்ய வர்க்கங்களில் எண்மர் தலைமை பெற்று அஷ்டதிக் கஜங்களென்கிற சிறப்புப் பெயரும் பெற்று உலகம் போற்ற நின்றார்கள். அவர்களது திருநாமம்—1. வான மாமலை ஜீயர். 2. பட்டர்பிரான் ஜீயர். 3. திருவேங்கடராமாநுஜ ஜீயர். 4. கோயிலண்ணன். 5. பிரதிவாதி பயங்கரமண்ணன். 6. எறும்பியப்பா. 7. அப்பிள்ளை. 8. அப்பிள்ளார்.

இவர்களுள் 'எறும்பியப்பா' என்பவர் வந்து ஆச்ரயித்த விதம் வெகு விசித்திரமானது. சோளஸிம்ஹபுரமென்று பிரசித்தமான திருக்கடிகைக்கு அருகிலுள்ள எறும்பி யென்னும் அக்ரஹாரத்திலே தோன்றி தேவராஜாசார்யரென்று திருநாமம் பூண்டிருந்த இவர் மஹாவித்வான். இவர் ஒருகால் ஸ்ரீரங்கத்திற்கு வந்து அங்கே தம் உறவினரான அண்ணனது திருமாளிகையில் தங்கியிருக்கையில் அவரோடு கூட மணவாளமாமுனிகளின் காலக்ஷேப கோஷ்டியிலும் அந்வயிக்கப் பாக்கியம் பெற்றார். அப்போது மாமுனிகளின் ஸர்வதோமுகமான ப்ரஜ்ஞாவிசேஷத்தைக் கண்டு களித்தும், அவரது திருவடிகளில் ஆச்ரயிக்க பாக்யபரிபாகம் விளையாமலே அங்கு தீர்த்த ப்ரஸாதங்களும் பெறாமலே தம்மூருக்குத் திரும்பிவிட்டார். தம் திருமாளிகையிலுள்ள பெருமாளுக்குத் திருவாராதனம் கண்டருளப் பண்ணப் புகுந்து கோவிலாழ்வார் திருக்காப்பை நீக்கப் பார்க்கையில் திருக்காப்பு திறக்கப் பெற்றதில்லை. பல வுபாயங்கள் செய்து பார்த்தும் ஒருபடியாலும் திறக்கப்போகாமையாலே மிக வருந்தி அமுது செய்யாமலே, 'இது என்ன அபசார பலனோ!' என்று மனம் நொந்து மூர்ச்சித்துக் கிடந்தார்.

அன்றிராக்கனவில் அவருடைய ஆராதனப் பெருமாளான சக்ரவர்த்தி திருமகன் எதிரே வந்து தோன்றி 'நமக்கு ஆருயிராய் உலகுக்கு ஒருயிரான மணவாளமாமுனிகளின் திருவடிகளிலே பணியாமல் மீண்டு வந்தீராதலால் உமக்கு நாம் கதவு திறந்திலோம்; ஆதிசேஷன் தானே மாமுனிகளாக வந்து அவதரித்தமை அறிவீராக; அவரது திருவடிகளிற் சென்று ஆச்ரயித்துத் தூய்மை பெற்று வந்தாலன்றி உமது கையில் நாம் திருவாராதனம் கொள்வதில்லை' என்று சொல்லி மறைய, அப்பாவும் துயிலெழுந்து மிக வியந்து இவ்வதிசயத்தை அன்பர்களுக்கு அறிவித்து அப்போதே புறப்பட்டுத் திருவரங்கம் சென்று சேர்ந்து மாமுனிகளின் திருவடிகளிலே வேரற்ற மரம்போலே விழுந்து இச்செய்தியை விண்ணப்பம் செய்து அபராதக்ஷாமணம் செய்துகொண்டு 'இனி அடியேனுக்கு இத்திருவடி நிழலொழியப் புகலிடம் வேறொன்றில்லை; நெறிகாட்டி நீக்கப்பாராதே அடியேனை அத்தாணிச் சேவகத்திற்கு ஆட்படுத்திக் கொண்டருளவேணும்' என்று மிகவும் பிரார்த்தித்து மாமுனிகளின் பரிபூர்ண அநுக்ரஹத்தைப் பெற்று அன்று தொடங்கி ஸகலார்த்தங்களும் சிக்ஷிக்கப் பெற்றுக் கிருதார்த்தரானார். இவர் பரமபக்தி தலையெடுத்து மாமுனிகள் விஷயமான காவ்யம் நாடகம் சம்பூ ஸ்தோத்ரங்கள் பலவும் பணித்தார். இவர் தம்முடைய இல்லத்தில் பரம்பரையாக ஆராதிக்கப்பட்டு வந்த சக்ரவர்த்தி திருமகன் ஸ்தானத்தில் மணவாளமாமுனிகளையே எழுந்தருளப் பண்ணி ஆராதித்து வந்தார்.

மாமுனிகளுக்கு அமைந்துள்ள பெருமைகளில் தலையான பெருமை யொன்று கேண்மின். இமவந்தந்தொடங்கி யிருங்கடலளவுமுள்ள எல்லாத் தலங்களிலும்

"ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தீபக்த்யாதி குணார்ணவம்,
யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம்"

என்கிற இவ்வாசிரியரது திவ்விய தனியனே திவ்யப்பிரபந்தங்களின் அநுஸந்தானங்களில் நியதிபெற்று விளங்குகின்றது. "மணவாள மாமுனியே இன்னமொரு நூற்றாண்டிரும்"

என்று முடிக்கப்படுகிறது. காருள்ளளவும் கடல்நீருள்ளளவும் வேதமுள்ளளவும் வேத கீதனுள்ளளவும் இங்ஙனே நடந்து வருமென்பதில் ஐயமில்லை. இது ஸ்ரீரங்கநாதனுடைய திருவாணையினாலமைந்தது. அப்பெருமான் மாமுனிகளிடத்தே திருவாய்மொழிப் பொருள் கேட்க விரும்பி ஒரு நாள் இவர்க்கு அருளப்பாடிட்டு 'ஜீயரே! நாளை முதலாக நம்முடைய பெரிய திருமண்டபத்திலே யிருந்து நம்மாழ்வாருடைய திருவாய்மொழியை ஈடு முப்பத்தாறு யிரம் முதலான வியாக்கியானங்களுடனே பிரவசனம் செய்து போரீர்" என்று நியமிக்க மாமுனிகள் மஹாப்ரஸாதமென்று உகந்து அப்படியே மறுநாள் தொடங்கி 'கங்கா ப்ரவாஹமோ? அல்லது கங்கையிற் புனிதமாய காவிரிப் பெருக்கோ?' என்னலாம்படியாக மிக அற்புதமாய் 'விசதவாக்சிகாமணி' என்கிற தமது விருது நிறம் பெறவும் ஸர்வஜ்ஞ ஸார்வபௌமர் என்கிற பட்டம் பொலிபவும் பிரவசனம் செய்து வந்தார். அப்போது பெருமாளும் நாச்சியாருடனேகூடச் சீரிய சிங்காசனத்தமர்ந்து பேரோலக்கமாகவிருந்து ஒரு ஸம்வத்ஸரமளவும் நித்யோத்ஸவ பக்ஷோத்ஸவ மாஸோத்ஸவ ஸம்வத்ஸரோத்ஸவாதிகளான ஸகல மஹோத்ஸவங்களையும் நிறுத்தித் திருச்செவி சாத்தும்படியாயிற்று. காலக்ஷேபம் முடிவுபெறும் நாளில் அழகிய மணவாளன் நாலைந்து பிராயம் வாய்ந்த அர்ச்சக குமாரனை கோலம்பூண்டு கனவேகமாகக் கோஷ்டியிடையிலே வந்து, அவரவர்கள் விலக்கினதையும் லக்ஷியம் பண்ணாமே புகுந்து, கைகூப்பி நின்று "ஸ்ரீசைலேச தயாபாத்ர" மென்று தொடங்கி முப்பத்திரண்டெழுத்துத் திருமந்திரமாகிய தனியனென்னும் ச்லோகத்தை விண்ணப்பஞ் செய்து மறைய, இவ்வதிசயத்தை நோக்கி அனைவரும் வியந்தனர். இத்தனியனை சிஷ்யவர்க்கங்கள் பட்டோலை கொண்டு மஞ்சட் காப்பு சாத்தி ஸ்ரீரங்கநாதன் திருவடிவாரத்திலே ஸமர்ப்பித்தெடுத்துத் தட்டிலே வைத்துச் சிறப்பாகக் கொண்டாடினார்கள். வடமொழி வேதத்திற்கு ப்ரணவம் போலத் தமிழ்வேதாநுஸந்தானத்திற்கு இத்தனியனே முதலும் முடிவுமாகக் கடவதென்று பெருமாளுடைய நியமனமும் பாங்காக வாய்த்தது. பின்பு சிஷ்யர்களால் பணிக்கப்பட்ட வாழித் திருநாமமும் அரங்கேசனாணையின்படி அநுஸந்தான நியமத்திற் சேர்ந்ததாயிற்று.

மாமுனிகளருளிச் செய்துள்ள ஸ்ரீஸூக்திகளின் பெருமையும் தூய்மையும் வாய்கொண்டு வருணிக்கமுடியாதது. உலகில் ஸ்ரீஸூக்திகளருளிச் செய்தவர்கள் பலபல ஆசாரியர்களுமுண்டு. எனினும் மாமுனிகளின் திவ்ய ஸ்ரீஸூக்திகளின் மாதுர்யமும் காம்பீர்யமும் அர்த்த புஷ்டியும் ரஸபுஷ்டியும் மிக வியக்கத்தக்கது. ஏற்கெனவே அவதரித்துள்ள பூர்வாசார்ய திவ்ய ஸூக்திகளை ப்ரவசனம் செய்தருள்வதிலேயே மிகுந்த குதூஹலங் கொண்ட மாமுனிகள் சுதந்திரமாகச் சில நூல்களை யிட்டருளத் திருவுள்ளமுடையரல்லரே யானாலும் இவ்வுலகின் பாக்ய பரிபாகத்தினால் சிஷ்யர்களின் வேண்டுகோளுக்கிணங்கியும் எம்பெருமானது நியமனத்தைச் சிரமேற் கொண்டும் தேனே பாலே கன்னலே யமுதேயான திவ்ய க்ரந்தங்களையும் அருளிச் செய்யும்படியாயிற்று.

பிள்ளையுலகாசிரியர் அருளிச்செய்த பதினெட்டு ரஹஸ்யங்களுள் ஸ்ரீவசநபூஷணம்; தத்வத்ரயம், முமுக்ஷுப்படி என்கிற மூன்று ரஹஸ்யங்கள் மிகச் சிறந்தவையும் பிரதானங்களுமாகையாலே அம் மூன்றுக்கும் வியாக்யான மிட்டருளினார். அவரது திருத்தம்பியாரான அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் அருளிச்செய்த ஆசார்யஹ்ருதயமென்னும் ரஹஸ்யரத்னத்திற்கும் வியாக்கியானம் இட்டருளினார். பெரியாழ்வார் திருமொழிக்குப் பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செய்திருந்த வியாக்யானங் கரையானுக்கு இரையாகி லோபித்திருந்ததனால் அதைத் தாமருளிச்செய்தார். இராமாநுச நூற்றந்தாதிக்கும், அருளாளப்பெருமாளெம்பெருமானாரருளிச்செய்த ஞானஸார ப்ரமேய ஸாரங்களுக்கும்

உரையிட்டருளினார். கீதைக்குத் தாத்பர்ய தீபமென்றொரு வியாக்கியான மியற்றியருளினார். ப்ரமாணத்திரட்டுகள், திருவாராதனப்ரயோகம், யதிராஜ விம்சதி, தேவராஜ மங்களம், உபதேசரத்தினமாலை, திருவாய்மொழி நூற்றந்தாதி, ஆர்த்திப்ரபந்தம் முதலியனவுமருளிச் செய்தார்.

வியாக்கியான மருளிச்செய்வதில் மாமுனிகளின் திறமை ஒப்புயர்வற்றது. ஸூத்ரம் போன்ற ஸ்ரீ லோகாசார்ய திவ்யஸூக்திகளுக்கு அவதாரிகையிடுகிற அழகும் மூலத்திற்கு அர்த்தமருளிச் செய்கிற வைகரியும் ஆங்காங்கு அர்த்தங்களைப் பிண்டீகரித்து நிகமித்தருளுகிற சைலியும், மதாந்தரங்களைக் கண்டித்தெழுதினாலுங்கூட ஒருவருடைய மனமும் நோகாத படிக்குப் வினா தூஷண பரிஹாரஸங்கள் சிறிதும் புகாதபடிக்கும், எந்த இடத்தை யெடுத்தாலும் சாஸ்த்ரார்த்தமே கைகொள்கனியாம் படிக்கும் 'ஸகல சாஸ்த்ர ஸாகர பாரங்கதர் இவரொருவரே' என்று திண்ணமாக எண்ணும்படிக்கும், மயக்கவைத்தல் முதலிய குற்றங்களுக்குச் சிறிதுமிடமில்லாதபடிக்கும் ஸ்ரீஸூக்திகளருளிச் செய்தவர் மாமுனிகளொருவரே.

உண்மையில், இவ்வாசிரியருடைய ஸ்ரீஸூக்திகளை ஸேவித்தபின்பு இன்னொருவரது வாக்கில் வாயை வைத்தால் சுவைக்கேடு தோன்றியே தீரும். பல சொல்லியென்? மற்றையோருடைய நூல்களைக் காணும்போது அவரவர்களது ஞானத்தை அளவிட்டு அறியும்படியாகவுள்ளது. மாமுனிகளின் வியாக்கியானங்களை ஸேவிக்குமளவில் மாருதியை நோக்கி இராமபிரானருளிய வாசகமே நினைவுக்கு வருகிறது;

"இல்லாத வுலகத் தெங்கும் ஈங்கிவனிசைகள் கூரக்
கல்லாத கலையும் வேதக் கடலுமே யென்னுங் காட்சி
சொல்லாலே தோன்றிற்றன்றே ஆர்கொல் இச்சொல்லில் வல்லான்?
வில்லார் தோளிளையவீர! விரிஞ்சனோ விடைவலானோ"

என்று இராகவன் வியந்து கூறினதாகக் கம்பர் கூறியுள்ளாரன்றோ? அஃது உண்மையில் மணவாளமாமுனிகள் விஷயத்திலேதான் பொருந்தக் காணலாகும்.

நம்மாழ்வார் தம்முடைய பெருமையைத் திருவாய்மொழியில் "துவளில் மாமணி மாடம்" "உண்ணுஞ்சோறு பருகுநீர்" முதலான பதிகங்களில் தாமே வெளியிட்டுக் கொண்டவாறுபோல, மாமுனிகள் தாமும் ஆர்த்திப்ரபந்தத்தில் ஒரு பாசுரத்தினால் தமது பெருமையைத் தாமே அருளிச் செய்யும்படியாயிற்று நம்போல்வார் நிச்சலும் அநுஸந்தித்து உய்வதற்காக. அந்தப் பாசுரம் கேண்மின்;—

தென்னரங்கர் சீரருளுக்கிலக்காகப் பெற்றோம்
தேவனுறை திருப்பதியே யிருப்பாகப் பெற்றோம்
மன்னியசீர் மாறன் கலையுணவாகப் பெற்றோம்
மதுரகவி சொற்படியே நிலையாகப் பெற்றோம்
முன்னவராம் நங்குரவர் மொழிகளுள்ளப் பெற்றோம்
முழுது நமக்கவை பொழுது போக்காகப் பெற்றோம்
பின்னையொன்றுதனில்நெஞ்சு பேராமற் பெற்றோம்
பிறர்மினுக்கம் பொறுமையிலாப் பெருமையும் பெற்றோமே.

இச்செய்யுளமுதத்தையே அன்பர்கள் நிச்சலும் பருகிக் களிப்பாராக. .... .... *

# 2. மணவாளமாமுனிகளின் திருநாவீறு.

:o:

உலகில் பேசுவதெல்லாம் பேச்சல்ல, எழுதுவதெல்லாம் எழுத்தல்ல. பட்டர் ஸ்ரீ குணரத்நகோசத்தில் "அநாக்ராதாவத்யம் பஹுகுணபரீணஹி" என்று ஆரம்பித்து ஐந்து விசேஷணங்களிட்டு வாக்விலஸிதம் இப்படி இருக்கவேணுமென்றருளிச்செய்கிறார். அப்படிப்பட்ட வாக்விலஸிதம் மணவாளமாமுனிகளினுடையதேயாகும். "பதாநாம் ஸௌப்ராத்ராத் அநிமிஷநிஷேவ்யம் ச்ரவணயோ:" என்று அந்த ச்லோகத்தில் பட்டர்பணித்த அதிசயம் மாமுனிகளின் திவ்யஸூக்திகளில்தவிர வேறெங்கும் காணக்கிடைக்காது. சொல்லமைப்பு என்பதொன்றுண்டே அது மற்றையோருடைய க்ரந்தங்களில் ஸாதாரணமாகவேயிருக்கும். மணவாளமாமுனிகளின் திவ்யக்ரந்தங்களில் அது ஆச்சரியம் அற்புதம் அந்யாத்ருசம் என்றே சொல்லத்தக்கதாக விளங்கும். இதைத் தெரிந்து கொள்வது எல்லார்க்கும் எளிதன்று. முராரி யென்கிற வொரு மஹாகவி "அப்திர் லங்கித ஏவ வானரபடை:கிந்த்வஸ்ய கம்பீரதாம் ஆபாதாலநிமக்நபீவரதநுர் ஜாநாதி மந்தாசல:" என்கிறான். வானரமுதலிகள் கடலைக் கடந்துவிட்டார்களானாலும் மேலெழச்சென்ற வவர்களுக்குக் கடலின் ஆழம் சிறிதும் தெரியாதென்றும் மந்தரமலையொன்றே அதனையறியவல்லதென்றும் அந்த ச்லோகத்தில் கூறப்பட்டிருப்பது போல, ஸாரஸ்வதஸாரத்தை உட்புகுந்து மர்மஸ்பர்சியாக உணரப்பெற்றவர் கடல்சூழ்ந்த மண்ணுலகுக்குள் மணவாளமாமுனிகளொருவரேயென்று குடப்பாம்பில் கையிட்டுரைப்பர் அவருடைய திவ்ய ஸ்ரீஸூக்திகளில் நன்கு ஆழ்ந்தவர்கள்.

அஸூயையினாலும் த்வேஷத்தினாலும் பலர் அவருடைய ஸ்ரீஸூக்தியமுதக்கடலில் அவகாஹிக்கப்புகுவதில்லை. அவகாஹிக்கும் பாக்யம் பெற்றவர்களிலும் பலர் 'மணிப்ரவாள ஸ்ரீஸூக்திதானே' என்று ஸாமான்யமாக நினைத்து மேலெழப்பார்த்துச் செல்வர்கள். "தேநாவலோக்ய க்ருதிந: பரிபுஞ்ஜதே தம்" என்று பட்டர் அருளிச்செய்தபடி அநுபவ பாக்ய பரிபாகமுள்ளவர்கள் யாரோசில ஸுக்ருதிகளேயாவர்.

மாமுனிகளின் திவ்யக்ரந்தங்களுக்குள் தத்வத்ரய வியாக்கியானமொன்றை ஸேவிக்குங்கால்—"ஸகலசாஸ்த்ரங்களிலும் ஸ்ரீபாஷ்ய ஸுதாநிதியிலும் ஆழ அவகாஹித்த மஹாஜ்ஞானநிதி இவரல்லது வேறு எவருமில்லை" என்று சபதமிட்டுரைக்கலாம். ஞானம் என்பது வேறு, வ்யுத்பத்தி என்பது வேறு. அந்த வ்யுத்பத்தியானது ஸகலதந்த்ரங்களிலும் மணவாளமாமுனிகளுக்கு மிகவும் அதிசயிக்கத் தக்கது. இதை நிரூபிக்க அவருடைய திவ்ய ஸ்ரீஸூக்திகளில் பலபல விடங்களிருந்தாலும் ஓரிடந்தன்னையே இங்குக் குறிப்பிடுகிறேன். தத்வத்ரயமென்னும் ஸ்ரீலோகாசார்ய க்ரந்தத்தில் ஈச்வரப்ரகரணத்தில் (22) "இதுக்கு ப்ரயோஜனம் கேவலலீலை" என்றொரு சூர்ணையுள்ளது. எம்பெருமானது ஜகத்ஸ்ருஷ்டியாகிற வியாபாரத்திற்கு வெறும் லீலையே ப்ரயோஜனம் என்றபடி. ஸ்ரீபாஷ்யத்திலும் (ஸூ. 171.) * லோகவத்து லீலா கைவல்யம் * என்கிற ஸூத்ரத்தின் பாஷ்யத்திலே "ஜகத்ஸர்கே லீலைவ கேவலா ப்ரயோஜநம்* என்றும் *பரஸ்ய ப்ரஹ்மணோ லீலைவ ப்ரயோஜநம்* என்றும் ஸ்ரீஸூக்தி விந்யாஸமுள்ளது. இதில் எந்த வித்வானுக்கும் எவ்விதமான விசிகித்ஸையும் எளிதாகத் தோன்றமாட்டாது. ஆனால் இங்கு மணவாளமாமுனிகளின் ப்ரஜ்ஞாவிசேஷம் ஆராய்ச்சி செய்யப்புகுந்த விதம் ஊன்றி நோக்கத்தக்கது. லீலையாவது என்ன? என்று கேட்டால் அதற்குப் பொருள் சொல்லவேண்டுமே. ஒரு காரியம் செய்யுமிடத்து அப்போதுண்டாகு

மொரு மஹேவிஹேதமொழிய பிற்பாடு வருவதொரு பலனைக் கணிசியாமல் பண்ணும் வியாபாரத்திற்கு லீலையென்று பேர். சிறுவன் லீலைசெய்கிறனென்றால் விளையாடல் என்கிற வொரு வியாபாரத்தைச் செய்கிறு னென்பதன்றோ பொருளாகிறது. ஆகவே லீலையென்பது ஒரு வியாபாரமென்று முடிந்தது. "ஸ்ருஷ்டிக்கு லீலை ப்ரயோஜநம்" என்றால் இந்த வாக்யம் ஸமந்விதமாகிறதாவென்று பார்க்கவேணும். ஸ்ருஷ்டியும் வியாபாரமாயிற்று. ஸ்ருஷ்டியாகிற வியாபாரத்திற்கு லீலையாகிற வியாபாரம் ப்ரயோஜனமென்றதாகத் தேறுகிறது. 'ஸ்ருஷ்டி தான் லீலை' என்று ஸமாநாதிகரணமாகச் சொல்ல வேணுமேயொழிய 'ஸ்ருஷ்டிக்கு லீலை ப்ரயோஜநம்' என்று வ்யதிகரணமாக வாக்விந்யாஸம் பண்ணுவதில் ஸமந்வயம் இல்லைபோல் காண்கிறதல்லவா? ஸ்ரீபாஷ்யகாரரும் பிள்ளை லோகாசார்யரும் வ்யதிகரணமாக வாக்விந்யாஸம் செய்திருப்பதைக் கீழே யெடுத்துக்காட்டினேம். இது எப்படி பொருந்தும்? என்கிற சங்கை தோன்றுவதே ஸாமான்ய ஞானிகளுக்கு அரிது. தத்வத்ரயவியாக்கியானத்தில் மணவாளமாமுனிகள் இந்த சங்கையை ஒருவாறு உத்தாபனம்பண்ணி ஸமாதானமருளிச் செய்திருக்குமழகு ஆழ்ந்த ஞானம் படைத்தவர்களுக்கே அறிய நிலமானது. அவ்விடத்து ஸ்ரீஸூக்திகள் காண்மின் ;....

"லீலையாவது தாதாத்விகரஸமொழிய காலாந்தரத்தில் வருவதொரு பலத்தைக் கணிசியாமல் பண்ணும் வ்யாபாரமேயாகிலும் "இதுக்குப்ரயோஜனம்" என்று ஸ்ருஷ்டிரூப வ்யாபாரத்துக்கு ப்ரயோஜனமாகச் சொல்லுகையாலே தாதாத்விகரஸமாத்ரத்தைச் சொல்லிற்றாகக் கடவது" என்பது மாமுனிகளின் அமுதமொழி.

இதில் "லீலையாவது............பண்ணும் வியாபாரமேயாகிலும்" என்கிற வாக்யம் வெகு கம்பீரமானது. "பண்ணும் வ்யாபாரமாகையாலே * இதுக்குப்ரயோஜனம் கேவலலீலை* என்கிற மூலஸ்ரீஸூக்தி ஸமந்விதமாக மாட்டாதாகிலும்" என்பது இங்கு விவக்ஷிதம். மூல ஸ்ரீஸூக்தி அஸமஞ்ஜஸமாயிருக்கிறது என்பதைத் தம்திருவாக்கினால் வெளியிடக்கூசி வாக்ய மருளிச்செய்கிறவழகு என்போல்வார் எடுத்துரைக்கக் கூடியதோ? "அகிலபுவந ஜந்மஸ்தேம பங்காதிலீலே" என்றும் "ஜகதுத்பத்தி ஸ்திதி ஸம்ஹார அந்த:ப்ரவேச நியமநாதிலீலம்" என்றும் ஸமாநாதிகரணமாகவே அருளிச்செய்த ஸ்ரீபாஷ்யகாரருங்கூட "ஜகத் ஸ்ருஷ்டௌ லீலைவ ப்ரயோஜநம்" என்று வ்யதிகரணமாக அருளிச் செய்தபடியால் அதையடியொற்றிப் பிள்ளை லோகாசார்யர் (மூலத்தில்) 'இதுக்குப்ரயோஜநம் கேவலலீலை' என்று அருளிச் செய்திருந்தாலும் இது சிறிது திருத்தியமைக்க வேண்டிய ஸ்ரீ ஸூக்தியேயாகும்; "இதுக்கொரு ப்ரயோஜனமில்லை; இது கேவலலீலையே" என்று வாக்ய ஸந்நிவேசமிருந்திருக்க வேணுமென்று திருவுள்ளம்பற்றிய மாமுனிகள் அதைப் பூப்பறித்தாப்போல் காட்டியிருக்கிறவிதம் சாஸ்த்ர வ்யுத்பத்தியில் ஆழ்ந்திருக்குமவர்களுக்கே நிலமாகக்கூடியது. மாமுனிகள் காட்டியருளிய ஸமாதானம் எத்தகைத்தென்னில்; தற்காலத்தில் தோன்றும் ரஸத்திற்கு ஹேதுவான வ்யாபாரத்திற்குத்தான் லீலையென்று பெயர்; ஆனால் இங்கு மூலம் ஸமந்விதமாவதற்காக அவ்வர்த்தத்தைச் சிறிது குறைத்துக் கொள்ளவேண்டும். தற்காலத்தில் தோன்றும் ரஸத்துக்கு ஹேதுவான வ்யாபாரம் என்கிற வரையில் போகாமல் தற்காலத்தில் தோன்றும் ரஸம் என்ற மட்டில் லீலாபதார்த்தமாகக் கொண்டால் மூலம் ஸமந்விதமாய் விடுகிறது என்று நிரூபித்தருளினாராயிற்று. இது லாக்ஷணிக நிர்வாஹம், ஔபசாரிகநிர்வாஹம் எனப்படும்.

"ஜகத் ஸ்ருஷ்டௌ லீலைவ ப்ரயோஜநம்" என்கிற ஸ்ரீ பாஷ்யகாரருடைய திவ்யஸூக்தியை ஒரு சதுச்சாஸ்த்ரவித்வானிடத்தில் கொடுத்து சங்கையை வெளியிட்டு ஸமாதானம் பண்

ணச் சொன்னால் வெகு ச்ரமப்பட்டு நாலு நாழிகை வாக்யராசிகளைப் பரப்பிக் காடுபாய்ந்து ஏதோ கூறுவர். சுருக்கமாக அதை எழுதிக்கொடுக்கவேணுமென்று கேட்டால் ஒரு வித்வானாலும் அது த்ருப்திகரமாகச் செய்ய முடியாதென்பதை ஸத்தியமாகச் சொல்லுகிறே னடியேன். மாமுனிகள் "தாதாத்விகரஸமாத்ரத்தைச் சொல்லிற்றாகக் கடவது" என்ற மிக வழகிய வொரு சிறு வாக்கியத்தில் முடித்தருளினது அவரொருவர்க்கே அஸாதாரணமான பாண்டித்ய ப்ரகர்ஷத்திற்குக் குன்றிலிட்ட விளக்காகும். இதை இங்கு நாம் எடுத்துக்காட்டி யது—மாமுனிகள் இப்படி ஆழ்ந்து காண்பவர் என்பதற்காக மாத்திரமல்ல; இங்ஙனே கவிந்து நிர்வஹிக்கக்கூடிய ஸ்ரீஸூக்திகளையருளிச் செயயுமியல்பு மாமுனிகளிடம் சிறிதும் காணக் கிடைக்காது என்பதற்காகவுமென்க. விசதவாக்சிகாமணி பட்டம் இவரொருவர்க்கே தகும்.

ஆராய்ச்சியில் தலைசிறந்த இப்படிப்பட்ட ஸ்ரீஸூக்திகள் மஹாசாஸ்த்ரஜ்ஞர்கள் உள் குழையத்தக்கவை மாமுனிகளின் ரஹஸ்ய வியாக்யான க்ரந்தங்களிலே நிதியாக அமைந்திருப் பதை உற்றுநோக்குங்கால் 'நீறுபூத்த நெருப்பு' என்றொரு பழமொழியுண்டே, அது மாமுனி களைத்தான் சேருமென்பர் பெரியோர். ஸ்ரீஸூக்தியோ தமிழ்; அர்த்தங்களோ கஹநசாஸ்த் ரார்த்தங்கள். அருளிச்செய்த மஹாசார்யரோ டம்பமென்பது சிறிதுமில்லாதவர். அவரு டைய ஞானபூர்த்தியும் ஆத்மகுண பூர்த்தியுமன்றோ அழகியமணவாளனை அடிபணியச்செய் தன. இப்படிப்பட்ட பெருமை வாய்ந்த பேராசிரியரை வழிபடும் மரபில் தோன்றினேனென் கிற பாக்ய விசேஷத்தை நினைதொறும் சொல்லுந்தொறும் நெஞ்சு இடிந்துகுமடியேனுக்கு.



# 3. எம்பெருமானாரும் மணவாளமாமுனிகளும்.

:o:

மணவாள மாமுனிகளை எம்பெருமானாருடைய அபராவதாரமென்று அஷ்டதிக்கஜா சார்யர்களனைவரும் ஸாக்ஷாதநுபவத்தினால் நிர்ணயித்துப் பல பாசுரங்களும் ச்லோகங்களும் பணித்துள்ளார்கள். அவை ஜகத் ப்ரஸித்தமானவை. அவ்வளவு ப்ரஸித்தமல்லாமல்வித்வத் கோஷ்டியிலேயே ப்ரஸித்தமானதொரு விஷயம் இங்கு விஜ்ஞாபிக்கப்படுகிறது. திருநாராயண புரத்தில் மண்டயம் அனந்தாழ்வாரென்று ஸுப்ரஸித்தரான மஹாவித்வான் எழுந்தருளியிருந் தார். மைஸூர் அனந்தாழ்வானென்றும் அவர் வழங்கப்படுவதுண்டு. வேதாந்த வாதாவளி யென்று ஜகத்ப்ரஸித்தமான மஹா க்ரந்தரத்னங்களை யருளிச் செய்தவர் இவரே. இவர் ஜீவித்திருந்த காலம மிகவும் ஸமீபமானதே. (அதாவது, சென்ற நூற்றாண்டில் எழுந்தருளி யிருந்தவர்.) இவருடைய திருவுருவப்படம் ஸேவிக்கலாகிறது. அவருடைய சதுச்சாஸ்த்ர பாண்டித்ய ப்ரபாவங்களைக் கொண்டாடாதவர்களில்லை. அவரிடத்தில் ஸாமாந்ய சாஸ்த்ரங்கள் பயின்ற வித்வான்களின் சிஷ்யர்கள் [பலமதஸ்தர்கள்] இற்றைக்கும் ப்ரஸித்திபெற்று விளங்கு கிறார்கள்.

இம்மஹாவித்வான் மைஸூர் ஸ்ரீபரகாலமடத்தில் ஆஸ்தான வித்வானாக அமர்த்தப் பட்டிருந்தார். அங்கு தேசிக ஸம்ப்ரதாயஸ்தர்களான பலவித்வான்களினிடையே இவரொரு வரே வரவரமுநி ஸம்ப்ரதாயஸ்தராக விளங்கிவந்தார். சாகுந்தல நாடகத்தில் "காஸ்விதவ குண்டநவதீ" என்கிற ச்லோகத்தில் "மத்யே தபோதநாநாம் கிஸலயமிவ பாண்டுபத்ராணாம்" என்றது நினைவுக்கு வரும்படி யெழுந்தருளியிருந்தாராம். இவரையும் தேசிக ஸம்ப்ரதாயஸ்த ராக்கிக் கொள்ளவேணுமென்று அந்த மடாதிபதிஸ்வாமிக்குத் தோன்றி அந்த அவாவை

அடிக்கடி தெரிவித்துவர, இவர் அதற்கு இடங்கொடாதுவந்தார். கடைசியாக, விசேஷ த்ரவ்யோபபத்திகளையும் ஜாகீர் ஜமீன்களையும் கொடுப்பதாகச் சொல்லி நிர்ப்பந்திக்கவே இவரும் சிறிது இசைவுகாட்டியிருந்தார். 'நாளைகாலை முதல் திருமண்காப்பை மாற்றிக் கொள்வது' என்று ஒருநாள் இவர் எண்ணியிருக்கையில் அன்றிரவு கனவிலே எம்பெருமானார் தாமான தன்மையிலே இவர்க்கு ஸேவை ஸாதித்து உடனே மணவாள மாமுனிகளான திருக்கோலத்துடனும் ஸேவைஸாதித்து 'நாமே அவர், அவரே நாம்' என்று சொல்லி மறைந்தருளினார். இவரும் துயில் விழித்தெழுந்து எம்பெருமானாருடைய கருணைத் திறத்திற்கு மிகவும் வியந்து தாம் எண்ணியிருந்த எண்ணத்திற்காக மிகவும் அநுதபித்து காலையனுஷ்டானங்களை முடித்துக் கொண்டு ஒரு ச்லோகத்தை யெழுதி அந்த மடாதிபதிஸ்வாமிஸன்னிதியிலே ஸமர்ப்பித்தார். அந்த ச்லோகமாவது:—

சேஷ: ஸ்ரீமாந் நிகமமகுடயுக்மரக்ஷாப்ரவ்ருத்த:
ஸ்ரீமத்ராமாவரஜமுநிதாம் ஸௌம்யஜாமாத்ருதாஞ்ச,
விந்தந் த்ருப்யத்விமத படலீபாடநோத்தாம ஸூக்தி:
பூயாத் பவ்யப்ரதிதமஹிமா ச்ரேயஸே பூயஸே ந:— என்பது.

அந்த ஸமயத்தில் அந்த அனந்தாழ்வான்ஸ்வாமி ந்யாய பாஸ்கர மென்கிற மஹா க்ரந்தமெழுதிக் கொண்டிருந்தார். அதில் இரண்டாவது பரிச்சேதமெழுதிவருகையில் இந்த மஹாநுக்ரஹம் நேர்ந்தபடியினால் அந்த மஹாக்ரந்தத்தோடுகூடவே இவ்வநுக்ரஹவிசேஷமும் சாச்வதமாக உலகில் விளங்கவேணுமென்று கருதி மேலே குறித்த ச்லோகத்தை அந்த க்ரந்தத்தில் இரண்டாவது பரிச்சேதத்தில் விந்யாஸம் செய்தருளித் தாமே அச்சிட்டு வெளியிட்டார். இந்த சுலோகத்தின் கருத்தாவது—உபய வேதாந்தங்களையும் காத்தருள வேணுமென்று திருவுள்ளங்கொண்ட திருவனந்தாழ்வான் எம்பெருமானாராகத்திருவவதரித்து ஸம்ஸ்க்ருதவேதாந்த குத்ருஷ்டிகளை நிரஸித்தும், மணவாளமாமுனிகளாகத் திருவவதரித்து த்ராவிட வேதாந்த குத்ருஷ்டிகளை நிரஸித்தும் இப்படி உபய வேதாந்த ப்ரதிஷ்டாபனம் செய்து பெருமை பெற்றவன். நமக்கு அத்திருவனந்தாழ்வான் ஸகலவித நன்மைகளும் அளித்தருளவேணும்—என்பதாம்.

முக்கியமான குறிப்பு;—அவ்வனந்தாழ்வான்ஸ்வாமி பணித்த வேதாந்த வாதாவளிகளெல்லாம் அவருடைய காலத்திற்குப் பிறகு கீர்த்திமூர்த்திகளான திருநாராயணபுரம் குப்பண்ணய்ஸ்வாமி, காஞ்சீ குன்றபாக்கம் சீமாச்சார்யஸ்வாமி முதலான வித்வத்வரேண்யர்களால் பிரசுரம் செய்யப்பட்டன. ந்யாய பாஸ்கரம் மாத்திரம் அனந்தாழ்வான்ஸ்வாமியெழுந்தருளியிருந்தபொழுதே அவர்தாமே தெலுங்கு லிபியில் அச்சிட்டது. அது அச்சிட்டு முடிந்தபின் அதில் ஊடேயூடே மற்றும் பல விஷயங்கள் சேர்க்கத் தோன்றி அவற்றை ஆங்காங்கெழுதி மறுபடியும் வேறு பிரதி அச்சிடுவதாக இருக்கையில் அவர் லீலாவிபூதியை விட்டகல நேர்ந்தது. பிறகு அவற்றையெல்லாஞ் சேர்த்து ஸ்ரீகாஞ்சீ ஸுதர்சன அச்சுக்கூடத்தில் தேவநாகராக்ஷரத்தில் ஸுபரிஷ்க்ருதமாக அந்த மஹா க்ரந்தம் அச்சிடப்பெற்றது. மேலே குறித்த ச்லோகம் மங்கள ச்லோக ரூபமாக விருப்பதால் அது க்ரந்தத்தின் ஆதியிலோ அந்தத்திலோ இருக்கவேண்டியது ப்ராப்தமாக, அப்படியில்லாமல் இடையில் இருந்ததனால் ஸந்தேஹம் தோன்றி அப்போது திருநாராயண புரத்தில் எழுந்தருளியிருந்த ஸ்ரீ. உவே. வித்வான் மண்டயம் ஆழ்வார் ஸ்வாமிக்கு ஸ்ரீகாஞ்சீ (ஜகத்குரு.) அனந்தாசார்ய ஸ்வாமியினால் பத்ரிகையனுப்பப்பட்டது. அப்போது அந்த ஆழ்வார்ஸ்வாமியினால் மேலேவிவரித்த தத்துவம் விளக்கமாகத் தெரிவிக்கப்பட்டது. அந்த ந்யாய பாஸ்கர க்ரந்தம் இரண்டாவது பரிச்சேதம் எழுதிக் கொண்டிருக்கையில்தான் அந்த ச்லோகம் அவதரிக்க ப்ராப்தமாயிற்றென்று.

# 4. மணவாளமாமுனிகளும் அழகியமணவாளனும்

:0:

தென் திருவரங்கங் கோயில் கொண்ட தெய்வசிகாமணி நம்மணவாளமாமுனிகளுக்குத் தான் சிஷ்யனாகி அவரைத்தனக்கு ஆசார்யனாக்கொண்டு க்ருதார்த்தனாகக் குதூஹலித்தான். திருவாய்மொழிக்குச் சிறந்த வியாக்கியானமாக அமைந்த ஈடு முப்பத்தாறாயிரப்படியின் விசேஷார்த்தங்களை மணவாள மாமுனிகளின் திருவாக்கினால் கேட்கப்பெற வேணுமென்று ஆவல் கொண்டான். தனது திருக்கோயிலின் திருமுன்பே கருடமண்டபத்தில் எழுந்தருளியிருந்து ஸாதித்தருள வேணுமென்று கட்டளையிட்டனன். அதைக் கேட்டவுடனே மாமுனிகள்,

"நாமார் பெரியதிரு மண்டபமார் நம்பெருமாள்
தாமாக வெம்மைத் தனித்தழைத்து—ஸ்ரீமாறன்
செந்தமிழ் வேதத்தின் செம்பொருளை நாளுமிங்கே
வந்துரையென் றேவுவதே வாய்ந்து."

என்று நைச்சியந்தோற்ற அநுஸந்தித்து மறுநாள் தொடங்கி ஓராண்டளவும் பகவத் விஷய ப்ரவசனம் நடத்திவர, ஸமாப்தி தினத்தில் ஸ்ரீரங்கநாதன் ஒரு சிறு குமாரனைத் திருவோலக்கத்திலே வந்து நின்று,

"ஸ்ரீசைலேசதயாபாத்ரம் தீபக்த்யாதிகுணார்ணவம்,
யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம்"

என்கிற திவ்யபத்யத்தைக் கைகூப்பி நின்று விஜ்ஞாபித்தனனாக இதிஹாஸம் ப்ரஸித்தமாகவுள்ளது. இதுவொரு அதிசயோக்தியான இதிஹாஸமாயிருக்கலாமென்று சிலர் நினைக்கக்கூடும். மணவாளமாமுனிகளின் திருவடிகளிலும் அவருடைய வைபவங்களிலும் ப்ரதிபத்தியுள்ளவர்களுங்கூட இதுவொரு அதிசயோக்தியாயிருக்குமோவென்று நினைக்கக்கூடும். இத்தனியனில் சொற்கள் அமைந்திருக்கிற அமைப்பை ஆராயுமிடத்தில் இது தெய்வவாக்கேயன்றி மானிட வாக்காக இருக்க முடியாதென்பதை ப்ராமாணிகர்கள் எளிதிலுணரலாம். ஏன்? ஸ்ரீசைலேசதயாபாத்ர மித்யாதி ச்லோகம் ஸாதாரணமாகவொரு வ்யுத்பந்நனால் இயற்ற முடியாததோ?. இதைவிட இன்னமும் அதிசயித்ததாக இயற்ற முடியுமே. இது தெய்வவாக்காகவேயிருக்க வேணுமென்று எதுகொண்டு சொல்லுவது? என்னில்; அதை நன்கு நிரூபிக்கிறோம்.

இந்த ச்லோகமருளிச் செய்தவனாகச் சொல்லப்படுகிற பெருமான்தானே பண்டு இராமபிரானாகவும் கண்ணபிரானாகவும் திருவவதாரம் செய்தருளியிருந்தவனென்பதில் ஒருவர்க்கும் ஸந்தேஹமில்லையே. "மாமுனி வேள்வியைக் காத்து அவபிரதமாட்டிய அடுதிறலயோத்தியெம்மரசே அரங்கத்தம்மா!" என்றும், "கோவலனாய் வெண்ணெயுண்டவாயன் அண்டர் கோனணியரங்கன்" என்றும், "மதுரைமா நகரந்தன்னுள் கவளமால் யானைகொன்ற கண்ணனை யரங்கமாலை" என்றும் ஆழ்வார்கள் ஸ்ரீராம ஸ்ரீக்ருஷ்ணமூர்த்தியாகவே அரங்கநாதனை அருளிச் செய்திருப்பது அபலபிக்க முடியாததன்றோ.

# மணவாளமாமுனிகளும் அழகியமணவாளனும்

அப்படி இராமபிரானைத் திருவவதரித்திருந்த காலத்திலும் கண்ணபிரானைத் திருவவதரித்திருந்த காலத்திலும் சில வியக்திகளிடத்தில் ஆச்ரயித்து, அவ்விடங்களில் திருவுள்ளத்திற்கு த்ருப்தியில்லாமலே முடிந்திருக்கிறது. ஒவ்வொருவரிடத்திலும் ஒவ்வொரு குறைகண்டு வெறுப்புடனிருக்க நேர்ந்தது. அந்த வெறுப்பெல்லாந்தீர இப்போது மணவாளமாமுனிகளை ஆச்ரயித்து "ஸதாசார்ய லக்ஷணபூர்த்தியுள்ள இவரை ஆச்ரயிக்கப் பெற்றோமே!" என்று மகிழ்ச்சி கொண்டமை இந்த ச்லோகத்தில் ஒவ்வொரு விசேஷணத்திலும் ஸ்புடமாகக் காட்டப்பட்டிருப்பதை நிரூபிக்கிறோம் காண்மின் ;—

1. ஸ்ரீசைலேசதயாபாத்ரம் என்பது முதல் விசேஷணம். ராமாவதாரத்தில் சைலேச தயாபாத்ரமான வொரு வ்யக்தியை வணங்கிக்கெட்டேன் : இப்போது ஸ்ரீசைலேசதயாபாத்ரமான வ்யக்தி விசேஷத்தை வணங்கி வாழ்கிறேன் என்கிறது. ராமாவதாரத்தில் வணங்கப்பட்ட சைலேசதயாபாத்ரமான வ்யக்தி யாரென்னில்; ஸுக்ரீவன். சைலமாவது ரிச்யமூக பர்வதம். அதற்கு ஈசர்—மதங்கமுனிவர். அவருடைய தயைக்குப் பாத்ரபூதன் ஸுக்ரீவன், என்பது ஸ்ரீராமாயணம் கிஷ்கிந்தாகாண்டத்தில் பதினோராவது ஸர்க்கத்திலுள்ள கதையினால் ஸ்பஷ்டம். ஆயிரம் யானை பலங்கொண்டவனை துந்துபி யென்னுமரக்கன் எருமைக்கடா வடிவமெடுத்துக் கிஷ்கிந்தைக்குவந்து வாலியைச் சண்டைக்கழைக்க, இருவர்க்கும் பிரபலமான போர்கடந்து வாலியினால் துந்துபி சரீரம் முழுதும் மடியும்படி பிசையப்பட்டு அவ்வரக்கன் மரணமடைந்து தரையில் விழ, வாலி அவனுடைய வுடலை ஒரு யோசனை தூரம்போய் விழும்படி வீசியெறிய, அப்போது அவனது வாயிலிருந்து ரத்தத்துளிகள் காற்றினால் தள்ளுண்டு [சைலேசரான] மதங்கமாமுனிவரின் ஆச்ரமத்தில்போய்விழ, அதைக்கண்ட அம்முனிவர் மிகுந்த சீற்றங்கொண்டு தன் ஞானத்ருஷ்டியினால் இங்ஙனம் தீச்செயல் செய்தவன் வாலியென்றுணர்ந்து "பரிசுத்தமான எனது ஆச்ரமத்தை இவ்விதம் அபரிசுத்தமாக்கினவன் யாவனோ அவனும் அவனன்பர்களும் இவ்வாச்ரம பரிஸரங்களில் வந்தால் உடனே மரணமடையக் கடவர்கள்" என்று சாபமிட்டு அச்சாபம் நடத்தைக்கு வருவதற்கு ஒரு நாள் கெடு கொடுத்திருப்பதாகவும் சொல்ல, உடனே அவ்வனத்திலுள்ள [வாலியைச்சேர்ந்த] வானரர்களெல்லாரும் ஓடிச்சென்றனர். சாபபயத்தினால் வாலி அவ்விடம் வருவதற்கில்லாதபடியாயிற்று. அவனுடைய ஸம்பந்தமற்றவனை ஸுக்ரீவன் மாத்திரம் தனது அன்பர்களுடன் அவ்வாச்ரமத்தில் வாழ்ந்து வந்தனனாதலால் அவன் சைலேச தயாபாத்ரமாயினன். "ஸுக்ரீவம் சரணம் கத:" என்கிறபடியே அவனை வணங்கியிருந்த இராமன் பிறகு அவனோடே மனஸ்தாபப்பட நேர்ந்துவிட்டது. அவ்விஷயம் கிஷ்கிந்தாகாண்டம் முப்பதாவது ஸர்க்கத்தில் விளங்கியதே. அதாவது—மாரிகாலம் முடிந்தபின்பும் ஸுக்ரீவன் சேனைகளைத் திரட்டிக்கொண்டு வாராமற்போகவே பெருமாள் இளையோனை நோக்கி 'லக்ஷ்மணா! இன்னமும் சுக்ரீவன் என்னை அடியோடு மறந்து வாளாகிடக்கின்றனன்காண்; செய்ந்நன்றி மறந்த காதகனன்றோ சுக்ரீவன்; நீ உடனே அவனிடஞ்சென்று நான் சொன்னதாகச் சொல்லு; செய்ந்நன்றி மறந்த பாபிஷ்டன் புருஷர்களிற் கடையானவன்; அவன் மரணமடைந்தால் அவனது உடலை மாமிசந்தின்னும் ஜந்துக்களும் தின்னமாட்டா. லக்ஷ்மணா! என் பராக்ரமத்தைச் சுக்ரீவன் நன்றாக அறிந்திருந்தும் சிறிதும் அச்சமில்லாமல் கிடக்கிறானே; வாலி சென்றவழி அவனுக்கும் திறந்திருக்கிறதென்று அவனிடம் கூறு. அவனை உற்றாருறவினரோடும் யமபுரமனுப்பச் சித்தமாயிருக்கிறேனென்று தெரிவி' என்று கூறியிருப்பதேபாம். "ஸுக்ரீவம் நாதமிச்சதி" என்றும் "ஸுக்ரீவம் சரணம் கத:" என்றும் சடுபட்டவிடத்திலே இப்படி மனஸ்தாபப்பட நேர்ந்துவிட்டதனால், முன்பு சைலேச தயாபாத்ர பூதனை வொருவனை வணங்கிவருந்தின குறைதீர இப்போது ஸ்ரீசைலேச தயா

பாத்ர பூதரை வணங்கி வாழ்கின்றேனென்றதாயிற்று. திருமலையாழ்வாரென்கிற திருவாய்மொழிப்பிள்ளையின் இன்னருளுக்கு இலக்கான மாமுனிகளை வணங்குகின்றேனென்கை.

2. இனி இரண்டாவது விசேஷணம் தீபக்த்யாதி குணார்ணவம். ஸ்ரீராமனை அவதரித்திருந்த அக்காலத்திலே ஸுக்ரீவன் காலிலே குனிந்ததுபோலவே லவணார்ணவத்தின் காலிலும் குனிந்தமை யுத்தகாண்ட ப்ரஸித்தம். "ஸமுத்ரம் ராகவோ ராஜா சரணம் கந்துமர்ஹதி" என்ற விபீஷணாழ்வானுடைய வாக்கின்படி லவணார்ணவத்தை நோக்கிச் சரணாகதி பண்ணியிருந்து அங்கும் மநஸ்தாபம் மிகுந்தது. அக்கடலரசன் முகங்காட்டாதிலனாக, மிகவும் சீறிச் சிவந்து "சாபமாநய ஸௌமித்ரே!........ஸாகரம் சோஷயிஷ்யாமி"—லக்ஷ்மணா! வில்லையும் கொடிய அம்புகளையும் கொண்டுவா; இதோ கடலை வெறுந்தரையாக்கி விடுகிறேன் என்று கூறி நிக்ரஹத்திலேயன்றோ துணிந்து நின்றது. சரணாகதி பண்ணினவிடத்திலே இது தகுமோ? அப்படியான குறைதீர அந்த லவணார்ணவத்தைவிட்டு தீபக்த்யாதி குணார்ணவத்தை அடிபணிந்து வாழப் பார்க்கிறபடி. ஞானபக்தி விரக்திகளுக்குக் கடலான மாமுனிகளை வணங்குகின்றேனென்கை.

3. இனி மூன்றாவது விசேஷணம் யதீந்த்ரப்ரவணம். இப்போது ஸ்ரீரங்கநாதனாயிருக்கின்ற பெருமானே "மந்திபாய் வடவேங்கடமாமலை வானவர்கள் சந்தி செய்ய நின்றான் அரங்கத்தரவினணையான்" என்கிறபடியே திருவேங்கடமுடையானாகவும் நின்ற நிலையிலே எம்பெருமானார்க்கு [ஸ்ரீராமாநுஜர்க்கு] சிஷ்யனாயினன். "அப்பனுக்குச் சங்காழியளித்தருளும் பெருமாள்" என்று போற்றப்படுகின்ற ஸ்ரீராமாநுஜரிடம் திருமலையப்பன் திருவாழிதிருச்சங்கு பெற்றதனால் அந்த யதீந்த்ரரிடத்தில் சிஷ்யவ்ருத்திகொண்டிருந்தது ப்ரஸித்தம். ஆனால் அங்கு மநஸ்தாப மொன்றும் நேரவில்லையானாலும் இராமானுச நூற்றந்தாதியில் "தன்னையுற்றாட் செய்யுந் தன்மையினோர்" என்கிற பாட்டைத் திருச்செவி சாத்தினபின்பு 'யதீந்த்ரரிடத்திலே சிஷ்யவ்ருத்தி செய்வதிற்காட்டிலும் யதீந்த்ரப்ரவணரானார் திறத்திலே சிஷ்யவ்ருத்தி செய்வதுதான் சிறந்ததென்று தோன்றிவிட்டது. அந்தப்பாசுரத்தில், தன்னையுற்றாட் செய்வதிற்காட்டிலும் தன்னையுற்றாட் செய்யுந்தன்மையினோர் மன்னுதாமரைத்தாள் தன்னையுற்று ஆட்செய்வாரே சிறந்தவரென்று எம்பெருமானார் திருவுள்ளம்பற்றியதாக வெளியிடப்பட்டுள்ளதன்றோ. அதனால் யதீந்த்ரப்ரவணரையிறைஞ்சுகின்றே னென்கிறதாயிற்று. மணவாளமாமுனிகளுக்கு யதீந்த்ரப்ரவணரென்ற திருநாமம் சிறப்பாகக் கிடைத்ததென்றுணர்க.

4. இனி ச்லோகத்தின் ஸமாப்தி ✶ வந்தே ரம்யஜாமாதரம் முனிம். ✶ இராமனையும் கண்ணனையுமவதரித்த இரண்டவதாரங்களிலும் இரண்டு முனிகளிடத்திலே சிஷ்யவ்ருத்திசெய்திருந்தா னெம்பெருமான். ராமாவதாரத்தில் விச்வாமித்ரமுனிவன் பக்கலிலும் க்ருஷ்ணாவதாரத்தில் ஸாந்தீபனிமுனிவன் பக்கலிலும் சிஷ்யவ்ருத்தி செய்திருந்து அவ்விருவரிடத்திலும் வெறுப்பேயாயிற்று எம்பெருமானுக்கு. எங்ஙனேயென்னில், விச்வாமித்திரர் ஸ்ரீராம லக்ஷ்மணர்களுடன் மிதிலையில் ஜனகசக்ரவர்த்தியினது வேள்விச்சாலையில் புகுந்தபின் கௌதம புத்திரரும் ஜநகபுரோஹிதருமான சதாநந்தர் [பாலகாண்டம் 51 ஆம் ஸர்க்கம் முதலாக] விச்வாமித்ரருடைய பழைய கதைகளைச் சொல்லத்தொடங்கி அவர் ரஜோகுண தமோகுணங்களின் வசப்பட்டுச் செய்த செயல்களையெல்லாம் சொல்லிவர, அதெல்லாம் கேட்ட 'இராமன் இப்படிப்பட்ட வொருவரையா நாம் ஆசாரியனாகக் கொண்டோம்!' என்று வெறுத்திருக்கநேர்ந்தது. கிருஷ்ணாவதாரத்தில் அவந்திகாபுரியில் வாழ்ந்துவந்த ஸாந்தீபநிமுனிவரிடத்தில் அறுபத்திநான்கு கலைகளையும்பயின்ற கண்ணபிரான் "ஆசார்யாய ப்ரியம் தநமாஹ்ருத்ய" என்ற உபநிஷத்தின்

கட்டளையிலே குருதக்ஷிணை ஸமர்ப்பிக்கின்றவளவிலே அம்முனிவர் "மாதவத்தோன் புத்திரன் போய் மறிகடல்வாய் மாண்டானை ஓதுவித்த தக்கணையா உருவுருவே கொடுத்தான்" என்கிறபடியே என்றைக்கோ பிரபாஸ தீர்த்தத்தில் விழுந்து மாண்டுபோன மகனை மீட்டுத்தர வேணுமென்று வேண்ட அப்படியே கொடுத்தனன். கண்ணபிரானை ஸாக்ஷாத் நாராயணமூர்த்தியென்று அறியாதவனல்லன் ஸாந்தீபனிமுனிவன். அறிந்துவைத்தும் மோக்ஷபுருஷார்த்தத்தை விரும்பாதே மகனை மீட்டுத்தருகையாகிற க்ஷுத்ர புருஷார்த்தத்தை விரும்பினபடியால் அவன் பக்கலிலும் வெறுப்பேயாயிருந்தது. இப்படி வெறுப்புக்கு இலக்கான இரண்டு முனிகளையும் விட்டு ஸமஸ்தகல்யாண குணக்கடலான ரம்யஜாமாத்ருமுனியை வணங்கி வாழ்கின்றேனென்றதாயிற்று.

இவ்வளவு அர்த்த விசேஷங்களைக் கொண்ட இந்த ச்லோகம் எம்பெருமான்தானே சொல்லியிருக்க வேண்டுமேயொழிய ஒரு மனுஷ்யனுல் கவிசெய்திருக்க இயலாதன்றே. எம்பெருமானது ஹ்ருதயத்தன்னிலே உறையும் விஷயங்களன்றோ இவை. இவற்றை எடுத்துக் கொள்ளவும் முடியாதே பிறரொருவர்க்கு. ஆகவே இந்தத் தனியன் தெய்வவாக்கே என்பது திண்ணமாயிற்று. .... .... ....

---

# இதர பாத்திரத்தனியன் தத்துவம்.

—·——:o:——

1. திவ்ய ப்ரபந்தங்களுக்கு ஆரம்பத்தனியனாக * ஸ்ரீசைலேசதயா பாத்ரத்தனியனே பகவத்ஸம்மதத்தினுல் ப்ராமாணிகமானது. பிறகு 3-4 நூற்றாண்டுகள் கடந்த பின் விவாத நிமித்தம் மற்றைத்தனியனும் அதைச் சேர்ந்த வாழித்திருநாமங்களும் போட்டியாகப் பிறந்தவை. அச்சுக்கூடங்கள் ஏற்பட்ட பின்பு அவரவர்கள் யதேஷ்டமாக எழுதியச்சிடுமவற்றால் சில சரித்திரங்கள் தலைதடுமாறான நிலைமையில் வந்துவிட்டன. இப்படியே சில ஆண்டுகள் கழிந்துவிட்டால், பொய் மெய்யாகவும், மெய் பொய்யாகவும் ஆய்விடுகின்றது. பாமரஜனங்களின் ப்ரதிபத்தி எவ்வாறாக இருந்தாலும் விவேகிகளின் உள்ளம் என்ஞான்றும் உண்மையை உள்ளபடியே கடைப்பிடித்தேயிருக்கும். எத்தனையுகமானாலும் உண்மையான செய்தி உலகில் ஒரு புறத்திலாவது உலாவியே நிற்கும். "இது அடியோடு பொருந்தாத விஷயம்" என்று விவேகிகள் உணர்ந்த பின்புங்கூட ஆக்ரஹத்தாலே பற்றினது விடாதொழிய ப்ராப்தமாகிறது. இந்த பிரபல ஆபத்தில் தப்பிப்பிழைப்பார் மிகச் சிலரே. இப்போது நாம் விவேகிகள் உகக்க நிரூபிக்குமிதனைக்கண்டு அவரவர்கள் தம்தம் கொள்கையை மாற்றிக் கொள்ளப் போகிறார்களென்று நமது ப்ரதீக்ஷையல்ல. இன்னமும் அதிகமாகவே பிடிவாதம் கொள்ளவுங் கூடும் ஆனாலும் சில பிராமாணிகர்களுக்காவது பயன் படுமென்றெண்ணியே இதில் ப்ரவர்த்திக்கிறோம். தனியனுக்கு ஒரு மஹோத்ஸவம் கொண்டாட வேணுமென்று ஆசைகொண்டாலும், உண்மையில் எது தனியனோ, எது மிக்க பெரும்புகழ் படைத்ததோ அதற்கன்றோ உத்ஸவம் கொண்டாட வேண்டும். ஸ்ரீமாந் வேங்கடநாத தனியனே உண்மையான பெருமையுடையது. தேசிகனுக்கு எவ்வளவு பெருமையுண்டோ அவ்வளவு பெருமை இந்தத் தனியனுக்கு முண்டென்றால் மிகையாகாது. இதுவே ஸகல ஸஜ்ஜந பரிக்ருஹீதம். இதுவே தேசிகனுடைய திருவவதார ஸ்தலத்திலும் ஸமய விசேஷங்களில் மேன்மைபெற்று விளங்குவது. இதுவே ஒருவிதமான பங்கத்தையும் பெறாதது. இதுவே தேசிகன் காலத்தில் அவ

தரித்தது. இதுவே நாடு நகரமெங்கும் பரவியது. மற்றொரு தனியனும் அப்போதே அவதரித்தது என்பவர்களுங்கூட ஸ்ரீமாந்வேங்கட தனியனே முந்துற முன்னம் அவதரித்ததென்பதை இசைகின்றார்கள். பாத்திரத்தனியன் பிறப்பதற்குமுன் ஒன்பதேகால் வருஷத்திற்கு முன்னமே ஸ்ரீமான் தனியன் அவதரித்ததாக எழுதியுள்ளார்கள். பலசிறப்புக்கள் பெற்ற அந்தத் தனியனை அநாதரித்து, சண்டைத் தனியனுக்குச் சிறப்புச் செய்ய முயல்பவர்களின் கருத்து என்னோ? ஸ்ரீமான் வேங்கட தனியனுக்காக ஒரு சிறப்பு நடத்துகிறோமென்றால் இதில் ஸகல ஸ்ரீ வைஷ்ணவர்களும் ஸமரஸர்களாய்க் கூடியிருந்து அநுபவித்துக் குளிரக் கூடும். புதியதொரு கட்டிடத்தில் நடத்துவதைவிட்டு ஒன்றான தூப்புல் தேசிகன் ஸந்நிதியிலேயே இதை நடத்தவுங்கூடும். தேசிகன் திருவுள்ளமும் உகக்கக்கூடும். யுக்தமென்று உலகமும் புகழக்கூடும்.

2. இனி இந்த பாத்திரத்தனியன் ஜனித்து 600 வருஷம் ஆயினவென்பது உண்மைதானா? என்று பரிசீலிப்போம். ஏற்கெனவே ஸ்ரீமான் வேங்கட தனியன் அவதரித்து வீறு பெற்றிருக்கும்போது இந்த பாத்திரத் தனியன் பிறக்க என்ன ப்ரஸக்தி? ஸம்ஸ்க்ருதக்ரந்த காலக்ஷேபத்திற்காக அந்தத் தனியனும், த்ராவிட க்ரந்தகாலக்ஷேபத்திற்காக இந்தத் தனியனும் தோன்றினதாகக் கூறுகின்றார்கள். ஸ்ரீமந் நாதமுனிகள் ஆளவந்தார் எம்பெருமானார் எம்பார் ஆழ்வான் பட்டர் பிள்ளான் அம்மாள் அப்புள்ளார் முதலான ஸகல ஆசார்யர்களுக்கும் எந்தக்ரந்த காலக்ஷேபத்திலும் ஒரு தனியன் தான் வழங்குவதாகவுள்ளது. ஸமாச்ரயண பரம்பரைக்காக மூன்றாவதொரு தனியன் ஏற்படவேண்டாவோ? ஒவ்வொரு க்ரந்தத்திற்கும் ஒவ்வொரு தனியன் ஏற்படவேண்டாவோ? த்ராவிட க்ரந்த காலக்ஷேபத்திற்காகத் தனியே ஒரு தனியன் ஏற்பட்டதென்றால் அது தமிழ்ப்பாசுரமாக இருந்தாலாவது இசையலாம். ஏற்கெனவே உள்ள தனியனில் என்ன குறைகண்டு புதிய தனியன் இயற்றினார்களென்பது தெரியவேணும். ஸ்ரீமாந் வேங்கட தனியனில் தேசிகனுடைய ஆசார்யரைப்பற்றி ப்ரஸ்தாவமில்லாமையாலே ஒரு குறையிருந்ததென்றும், அக்குறைதீர ராமாநுஜ தயாபாத்ரத்தனியன் ஏற்பட்டதென்றும் எழுதியுள்ளார்கள். அப்படியானால், குறையோடு கூடின அந்தத் தனியன் லுப்தமாகி இதுவேயன்றோ ஸர்வஜநீநமாகப் பரிக்ருஹீதமாகவேணும்.

3. மணவாள மாமுனிகளுக்கு ஸ்ரீசைலேச தயாபாத்ரத் தனியன் திருவவதரிப்பதற்கு முன்னே வேறொரு தனியன் அவசியம் இருந்திருக்கவேணும். ஒரு ஸம்வத்ஸர காலம் மாமுனிகள் திருவடிகளிலே ஈடுஸேவித்தவர்கள் ஒரு தனியனைச் சொல்லித்தானே ஸேவித்திருக்கவேண்டும். அந்தத்தனியன் இப்போது யாருக்காவது தெரிந்துள்ளதா? முக்கியமானதொன்று அவதரித்துவிட்டால் அமுக்கியமானது அடங்கிவிடுமன்றோ. ராமாநுஜ தயாபாத்ரத்தனியன் தேசிகன் காலத்தில் ஜனித்திருந்து உகக்கப்பட்டிருக்குமாகில் பிறகு ஸ்ரீமாந் வேங்கட தனியன் ஜீவித்திருக்க நியாயமுண்டோ? ஸகல ஸந்தர்ப்பங்களிலும் இந்த பாத்திரத் தனியனையே அநுஸந்திக்க என்ன தடை? இதை விவேகிகள் ஆராயலாகாதா? ஏற்கெனவே சிஷ்டபரிக்ருஹீதமாயிருந்த ஸ்ரீமான் வேங்கட தனியனுக்கு லோபம் செய்யக் கூடாமையாலே அதற்கும் ப்ரசாரமிருக்க வேணுமென்று கருதி ஒரு வ்யவஸ்தை பண்ணினார்கள் என்னில்; இங்கே கவனிப்பது;— நம்மாழ்வாருடைய தனியனாக இப்போது உலகில் வழங்கி வருகின்றது *மாதா பிதா யுவதய: * என்கிற (ஆளவந்தாரருளிய) ச்லோகம். இது அவதரிப்பதற்கு முன்னே பல ஆசாரியர்கள் நம்மாழ்வாருக்குத் தனியன் அநுஸந்தியாமலிருந்திருக்கவில்லை. ஸ்ரீ மதுரகவிகள் ஸ்ரீமந் நாதமுனிகள் உய்யக்கொண்டார் புண்டரீகாக்ஷர் குருகைக்காவலப்பன் மணக்கால் நம்பி முதலானவர்கள் பல்லாயிரவர் அநுஸந்தித்த

ஆழ்வார் தனியன் எங்கே? என்றால் என்ன பதில் சொல்லுவோம். ஒருகாலத்தில் ஒரு தனியனுக்கு ப்ராபல்யம் ஏற்பட்டால் மற்ற தனியன் தன்னடையே மறைந்து போகு மன்றோ? மறைய வேணுமென்கிற அவசியமில்லை. ப்ரதானத்தனியன் என்கிற பெயர் பெறாமல் அதுவும் ஸாமாந்யஸ்தோத்ரச்லோக ரூபமாக ஒருபுறம் இருக்கலாம்.

4. ஸ்துதி ரூபமானவொரு பத்யமோ பாசுரமோ தனியனென்று வழங்கப்படுகிறது; ஒரு ஆசார்யருக்கு இப்படிப்பட்ட ஸ்துதிபத்யங்கள் பலபலவும் இருக்கலாம். ஆளவந்தார்க்கு * ஸ்வாதயந்நிஹ * நமோ நமோ யாமுநாய * இத்யாதிகளான பல ச்லோகங்கள் உண்டு. எம்பெருமானார்க்கு * வந்தே வேதாந்த கர்ப்பூர * இத்யாதி ச்லோகங்கள் பல்லாயிர முண்டு. இருந்தாலும் ஒரு ஆசார்யருக்கு ஒரு தனியன் தான் அஸாதாரணமாக அமையும். அங்ஙனம் அஸாதாரணமான தனியன் தேசிகனுக்கு எது? என்றால், ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய: என்பதேயாம். ‘இதுவன்று’ என்று யாரேனும் சொல்லவொண்ணுமோ? மிக நவீனமான ராமாநுஜதயா பாத்ரத் தனியனை ப்ராசீநம்போல் காட்டுவதற்கு இவர்கள் செய்த முயற்சி இதனுடைய நவீநத்வத்தையே நன்கு ஸ்தாபித்துக் கொடுக்கின்றதென்பதை யார்தா மறியார்? இந்தத் தனியன் பிறந்த காலத்தைக் குறிப்பிடுவதாக ஒரு சுலோகம் சேட்லூர் நரஸிம்ஹாசார்யர் வெளியிட்டிருக்கிறார் [தேசிக சரித்திரத்தில் பக்கம் 45ல்.] [கல்யப்தேஷு சதுஸ்ஸஹஸ்ர சதபங்க்த்யப்தே..........ஸுச்லோகோவததார திவ்யமஹிமா ராமாநுஜோக்த் யாதிம:] என்பதே அது. இதைப்பற்றி நமக்குப் பலவிஷயங்கள் விவக்ஷிதங்கள். விவேகிகளை நோக்கியே விளம்புகின்றோம்.

5. * சதுஸ்ஸஹஸ்ரசதபங்க்த்யப்தே * என்கிற பதம் வ்யுத்பந்நர் பிரயோகிப்பதன்று. சேட்லூர் பண்டிதரின் கவனம் இது என்பது இதனாலேயே ஸுஸ்பஷ்டம். “கலிஹூ நாலாயிரத்து நானூற்று நாற்பதாவதில்” என்னும் விவக்ஷைக்கு இந்தபதம் ஒருகாலும் வாசகமாகாது. (சது:) என்பதை மேலுள்ள ஒவ்வொரு லக்கத்தோடும் சேர்த்துக் கொண்டாலும் [4440–வருஷங்கள்] என்று பொருள்படுமே யல்லது விவக்ஷிதமான ஒரு வருஷத்தை, (அதாவது 4440–ஆவது வருஷத்தில் என்கிற பொருளை) ஒருநாளும் காட்டாது. இந்த மருமத்தையறிந்துகொள்ள ஸம்ஸ்க்ருத பாஷையில் ஆழ்ந்த வ்யுத்பத்தி வேணும். (அப்தே) என்று ஏகவசனமிருக்கையாலே ஒருவருஷத்தைத் தான் சொல்லும் என்னவொண்ணாது; வியாகரணத்தில் (* ஸங்க்யா பூர்வோ த்விகு: * த்விகுரேகவசநம்) என்கிற அநுசாஸநத்தினாலன்றோ இந்த ஏகவசநம் ப்ராப்தமாகிறது. 4440 வருஷங்கள் என்று அத்தனை வருஷங்களையும் இச்சொல் காட்டியே தீரும். (ஆங்கிலத்தில் Five o'clock என்பதற்கும் Five Hours என்பதற்கும் உள்ள வாசியை அறியுமவர்கள் இங்கு விவாதப்பட மாட்டார்கள்.) பஞ்சவர்ஷே என்பதற்கும் ‘பஞ்சமவர்ஷே’ என்பதற்கும் நெடுவாசியுண்டு. ஸங்கல்பஸூர்யோதயத்தில் (விம்சத்யப்தே விச்ருத நாநாவித வித்ய:) என்று ஸ்வாமி அருளிச் செய்கிறார். விம்சத்யப்தே என்பதற்கு ‘இருபதாவது வயதிலே’ என்று பொருளன்று. மொத்தம் 20 வருஷகாலம் சிரமப்பட்டு என்பதே அங்கு அர்த்தம். அதுபோல் இங்கும் 4440 வருஷகாலம் சிரமப்பட்டு ஒருவர் இந்தத் தனியனை இயற்றினார் என்று பொருளாகுமேயன்றி 4440–வது வருஷத்தில் இது பிறந்தது என்பதாகப் பொருள்பட வழியில்லை. பங்க்திஎன்பது (தச) என்பதற்குப் பர்யாயம். அதை எப்படி பிரயோகிக்கவேணுமென்பதை உணராமல் வெகு சிரமப்பட்டு ச்லோகமியற்றிவிட்டார். இதை ஒரு ஓலைச்சுவடியில் இவர்கள் காட்டமுடியாதென்பதை சபதமிட்டுரைப்பேன். இந்த சுலோகம் மாத்திரமே கல்பிதமென்கிறோமல்லோம்; இந்தப் பாத்திரத் தனியன் இன்னஹூ இன்னமீ இன்னநாளில் அவதரித்ததென்று கூறுகிற வார்த்தை வசனநடையாக

வும் ஒரு ஓலையேட்டில் காட்ட முடியாதென்பதையும் ஸத்தியமாகக் கூறுவோம். அன்றியும், லக்கத்தைத் தெரிவிக்க வேண்டுமிடங்களில் * கடபயாதிஸம்ஜ்ஞாரீதியில் சுலோகமியற்றுவது தான் பிராசீநர்களின் வழக்கம். இங்ஙனே ஸங்க்யாவாசக சப்தத்தை நேரேயிட்டு இயற்றப்பட்ட சுலோகம் பாத்திரத்தனியன் போலவே பச்சாத் கல்பிதமென்பது எளிதாக நிர்ணயிக்கப்படும். ஒரு தனியன் பிறந்ததற்காக அந்த காலத்தைத் தெரிவிக்கவேண்டி கல்யப்தம் முதற்கொண்டு திதி வார நக்ஷத்ராதிகளை யெல்லாம் தெரிவித்து ச்லோகம் இயற்றவேண்டிய அவசியம் என்ன? என்பதை விவேகிகள் விமர்சிக்கவேண்டும். ஸ்ரீமாந் வேங்கட தனியன் அவதரித்த காலத்தைப்பற்றி ஒரு ச்லோகமும் காணோமே. அதை மாத்திரம் வசனமாகவே யெழுதி முடித்திருக்கிறார்களே. தேசிகனுடைய திருவவதாரத்தைப்பற்றி இங்ஙனே ஒரு சுலோகமுண்டோ? தேசிக சரித்ரபரமான எந்த புஸ்தகத்தையும் எடுத்துக் கொள்ளலாம். நாம் பல நூல்களையும் பரிசீலித்திருக்கிறோம். * பாத்ரபதமாஸகத விஷ்ணுவிமலர்க்ஷே * என்பது போலவேயுள்ள சுலோகங்களினால் “புரட்டாசித் திருவோணத்தில் திருவவதரித்தார்” என்றிவ்வளவே கிடைக்கின்றது. விபவ வருஷத்தில் என்பார் சிலரும், சுக்ல வருஷத்தில் என்பார் சிலருமாய் நாளைக்கும் போராடிக் கொண்டிருப்பது அபலபிக்கவொண்ணாதது. இதைப்பற்றின வாதப்போர் வேதாந்த தீபிகையிலேயே நிகழ்ந்துளது; நாமும் அதைப்பற்றி ஒரு க்ரந்தம் வடமொழியிலும் தென்மொழியிலும் ப்ரபவ வருஷத்தில் வெளியிட்டிருக்கிறோம். ஒன்றான தேசிகனுடைய அவதார காலநிர்ணயத்திற்கே ஒரு சுலோகம் கிடைக்காமலிருக்கும்போது சண்டைத் தனியனுடைய ஜநநத்திற்கு ஒரு ச்லோகம் காட்டப்படுமேயானால் புதியதைப் பழையதென்று காட்ட எவ்வளவு பாடுபட்டிருக்கிறார்களென்பது தெரியவருகின்றதன்றோ. தேசிகன் ஓரிரவில் ஒரு யாமத்தில் அத்யாச்சர்யமான பாதுகா ஸஹஸ்ரத்தை அருளிச் செய்தாரென்று ப்ரஸித்தமாகச் சொல்லி வருகிறோம். இது அவதரித்தது எந்த வருஷத்தில் எந்த மாஸத்தில் எந்த நாளில் என்பதைப்பற்றி ஒருவரும் ஒருவரியும் எழுதிவைக்கவில்லை. பிறந்தநாள் முதலாக நீதி ஸ்தலங்கள் தோறும் பங்கப்பட்டு வருகிறவொரு தனியனுக்கு கல்யப்தம் முதற்கொண்டு எழுதி வைத்திருக்கிறார்களென்றால் இந்த வேலைத்திறம் மிக மெச்சத்தக்கதே. ஆக இவ்வளவான நிரூபணங்களினால் பாத்ரத்தனியன் புராதனமன்று என்பதும், புராதனமென்று காட்டிக்கொள்ள ப்ரயாஸப்பட்டிருக்கிறார்களென்பதும் தேறிற்று. கண்ணழிவு சொல்லமுடியாத பற்பல ஹேதுக்களினால் இதனை இன்னமும் ஸ்தாபிப்போம்.

6. ஸம்ஸ்க்ருத க்ரந்தகாலக்ஷேபத்திற்கு ஸ்ரீமாந் வேங்கட தனியனும், த்ராவிட—மணிப்ரவாள க்ரந்த காலக்ஷேபத்திற்கு பாத்திரத்தனியனுமாக ஸ்வாமி தேசிகனே வ்யவஸ்தை பண்ணி நியமித்தருளினர் என்று இவர்கள் எழுதியுள்ளார்கள். தேசிக திவ்யக்ரந்தங்கள் யாவும் ஓலையேடுகளில் நாளைக்கும் ஸம்ரக்ஷிக்கப்பட்டு வருகின்றன. திருமாளிகைகளிலும் மடங்களிலும் ஆங்காங்கு ஸுப்ரஸித்தங்களான (கனிமாரா லைப்ரெரி முதலிய) ராஜகிய புஸ்தகாலயங்களிலும் ப்ராசீந தாளகோசங்கள் பாங்காகப் பரிபாலிக்கப்பட்டுவருகின்றன. 10, 15 இடங்களில் இதம்பரமாக நாம் சென்று உண்மைதெரிந்து கொள்ளப் பரிசீலித்திருக்கிறோம். தேசிகனுடைய வடமொழி நூல்களோடு தென்மொழி நூல்களோடு வாசியற எல்லாவற்றிலும் ஸ்ரீமாந் வேங்கட தனியன் ஒன்றே திகழ்கின்றது. பாத்திரத்தனியன் ஒன்றிலாவது காணக் கிடைக்குமோ என்று நாம் பெருமுயற்சிகள் செய்து பார்த்தும் ஒன்றிலும் கிடைக்கவில்லை. கிடைக்கின்றதென்று கண்டு காண்பிக்கவல்ல மஹான்கள் உளரேல் தாராளமாக முன்வரலாம். [இத்தனியன் ஓலை ஸ்ரீகோசங்களில் காணப்படவில்லையென்று ப்ராமாணிகரான திருக்கோட்டியூர் ஸௌம்ய நாராயணாசார்யர் ஸாதித்தார். மேலும், ஓலை ஸ்ரீகோசங்கள் வரையில் போக

வேண்டிய அவசியமுமில்லை. கோவில் விவாதங்களில் ஸம்பந்தப்படாதவர்களும் ஸாதுக்களுமான பெரியார்கள் அச்சிடுவித்திருக்கின்ற தேசிக ரஹஸ்ய—வ்யாக்யானாதி க்ரந்தங்களையெடுத்துப் பார்ப்போம். அவற்றிலும் ஸ்ரீமாந் வேங்கட தனியன் தவிர இந்த பாத்திரத் தனியன் தலைகாட்டவில்லையே. ஸந்நிதி விவாதங்களில் கைதேறின ஆக்ரஹிகளான பிற்காலத்தவர்கள் அச்சிடுவித்துவரும் தேசிக க்ரந்தங்களில் இந்த பாத்திரத்தனியனையும் நுழைத்துப்பதிப்பித்து வருகிறார்களென்பது உள்ளது. காஞ்சீபுரத்தில் வ்யபதிஷ்டராக எழுந்தருளியிருந்த ஸ்ரீ வில்லியம் பாக்கம்ஸ்வாமி தாமே சோதித்துப் பதிப்பித்திருக்கும் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் இந்தத் தனியன் நுழைந்திருப்பதுண்டாவென்று நோக்குமின். தேசிகக்ரந்தங்களில் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரம் மிகவும் முக்கியமென்பது நிர்விவாதம். அதற்கு ஸாராஸ்வாதினீவியாக்யானம் ப்ரதாநதமம் என்பதும் ப்ரஸித்தம். அந்த வியாக்யானத்தின் தொடக்கத்தில் அந்த வ்யாக்யாதாவின் கையினால் எழுதியிருக்கும் தனியன் ஸ்ரீமாந் வேங்கட தனியனா? பாத்திரத் தனியனா? என்று [திருச்சேறைப் பதிப்பில்] பார்க்கலாம். ஸ்வாமி தேசிகனே ஏதோ தனியன் வ்யவஸ்தை பண்ணினார் என்கிறார்களே; இது ஸாராஸ்வாதினீகாரர்க்குத் தெரிந்திருக்கவில்லைபோலும்.

7. மணவாள மாமுனிகளின் எந்த க்ரந்தங்களையும் எடுத்துப்பார்க்கலாம்; தாள ஸ்ரீ கோசங்களோடு அச்சுப்புத்தகங்களோடு வாசியற எல்லாவற்றிலும் ஸ்ரீசைலேச தயாபாத்ரத் தனியன்தான் இருந்து தீரும். ராமாநுஜ தயாபாத்ரத் தனியனுக்கு இங்ஙனே ஒரு ப்ராமாண்யம் லவலேசமாகிலும் காட்டக்கூடுமாவென்று கேட்கிறோம். அச்சுக்கூடங்களோடு கூடவே இத்தனியன் ஏற்பட்டதென்பதற்கு அசைக்கமுடியாத நிரூபகங்கள் கிடைக்கும். இந்தத் தனியன் ஏறிய ஓலையேடு ஒன்றுகூட ஒருவரால் காட்ட முடியாதென்று துணிந்து கூறுகின்ற நாம் இவ்விஷயத்தில் எவ்வளவு பாடுபட்டு உண்மையைக் கண்டுபிடித்திருப்போமென்பதை அவரவர்கள் உள்ளத்துள்ளே ஊன்றியுணரலாம்.

8. "ராமாநுஜ தயாபாத்ரத் தனியன் திகழ்கின்ற ஓலை ஸ்ரீகோசம் இதோவுள்ளது, காணாய்" என்று கம்பீரமாக கோஷித்து ஒரு ஸ்ரீகோசத்தையாவது ஸதஸ்ஸில் காட்ட நேருமா? அப்படி ஒருவர் காட்டிவிடுவரேல், நானது ஆவணிமாதத்தில் இவர்கள் செய்யப் பாரித்திருக்கும் பாத்ரோத்ஸவத்திற்குத் தேவையான பொருளுதவியை நாமே முன்னின்று செய்விப்போம் என்று நாம் பல பத்ரிகைகளையச்சிட்டுப் பிரசுரம் செய்தும் ஒருவரும் எடுத்துக்காட்ட முன்வரவில்லை. இல்லாததை எங்ஙனே யெடுத்துக்காட்டமுடியும்?

9. இங்ஙனே நாம் துணிவுடன் எழுதுவதைக்காணும் சிலமஹான்கள்என்ன நினைக்கக் கூடுமென்றால், "உண்மையில் இந்த பாத்திரத் தனியன் ஏற்பட்டு 600 வருஷம் ஆகாவிடினும், சில ஸந்நிதிகளில் நேர்ந்துள்ள விவாதங்களை ஆராய்ந்து பார்க்குமிடத்தில் இந்தத்தனியன் ஏற்பட்டு ஏறக்குறைய இருநூறுவருஷமாவது அவசியம் ஆகியிருக்குமென்று எண்ண வேண்டியதாகிறது. வாஸ்தவத்தில் கி. பி. பதினெட்டாவது நூற்றாண்டின் முற்பகுதியில் இத்தனியன் ஜனித்ததாகவும் தெரியவருகிறது. அத்தருணத்திற்குப் பின்பு பலபல ஓலை ஸ்ரீகோசங்கள் எழுதப் பண்ணப்பட்டிருக்கலாமே; அவற்றில் ஏதாவதொரு ஸ்ரீகோசத்தில் இந்த பாத்ரத் தனியன் சேர்த்து எழுதப்பட்டிருக்கவுங்கூடுமே; அப்படிப்பட்டவொரு சுவடியைக் கொணர்ந்து காட்டிவிட்டால் என் செய்வது!" என்று நினைக்கக்கூடும்.

10. ஆரியர்காள்! ஓலை ஸ்ரீ கோசங்களை ஆராய்ச்சி செய்வதற்காக நாம் அடிக்கடி பலதலங்களுக்குச் செல்வதுண்டு. நம்முடைய க்ரந்தங்களையெல்லாம் ஊன்றி நோக்குமவர்கள்

இத்தகைய பரிச்ரயம் நமக்கு நெடுநாளாக வுண்டென்பதை நன்கறிவார்கள். அங்ஙனம் செல்லுமிடங்களில் இந்த ராமாநுஜதயாபாத்ரத் தனியன் விஷயமான ஆராய்ச்சியையும் நாம்செய்வது வழக்கம். ஏனென்றால், (1) சில திவ்யதேசங்களில் இத்தனியன் ஸம்பந்தமான சச்சரவே அதிகரித்திருப்பதாலும், (2) இத்தனியனைச் சிலவிடங்களில் வாயாற் சொன்னதற்கும் சொல்ல நினைத்ததற்கும் ராஜதண்டனைகள் ஏற்பட்டிருப்பதாலும், (3) இத்தனியனில் பற்று வைத்தது காரணமாகவே ஸ்ரீதாதாசார்ய வம்சஸ்தர்கள் பல திவ்யதேசங்களில் தங்களுடைய சிறந்த மரியாதைகளை அநியாயமாய் இழக்க நேர்ந்துவிட்டதென்று ஸ்ரீபெரும்பூதூர் வியவஹாரத்தில் கனம் ஹைகோர்ட்டு ஜட்ஜ்கள் தெரிந்து பரிதாபத்தோடு எழுதியிருக்கிறபடியாலும், (4) காஞ்சீபுரத்தில் மஹாவ்யாபகராகவும் ஸ்ரீ தேவராஜஸ்வாமி தேவஸ்தான தர்மகர்த்தாவாகவும் எழுந்தருளியிருந்த திருப்புட்குழி ஸ்வாமியென்று ஸுப்ரஸித்தரான உ. வே. ஸ்ரீ க்ருஷ்ணதாதாசாரியர் ஸ்வாமி 1874௵த்தில் செங்கற்பட்டு ஜாயிண்டு மேஜிஸ்ட்ரேட் கோர்ட்டு 72-நெ. தாவாவில் மிஸ்டர் குருல்துரை முன்னிலையில் பிரதிவாதியாக எழுந்தருளி "விளக்கொளி தேசிகன் ஸந்நிதிவாசலில் தென்கலைத் திருமண்தான் இருந்தது" என்றும், 6, 7 மாதத்திற்குமுன் நான் வெளியூர் போயிருந்தபோது யாரோ வடகலையார் அதைபிடித்து விட்டதாகக் கேள்விப்பட்டேன் என்றும், "அந்த தேசிகன் ஸந்நிதியிலுங் கூடத் தென்கலையார்களே தென்கலை மந்திரம் சொல்லியே திவ்யப்ரபந்த ஸேவை செய்து வருகிறார்கள்" என்றும் 19-9-1874ல் ஸ்டேட்மெண்டு கொடுத்திருப்பது அப்படியே அச்சாகி வெளிவந்திருப்பதாலும் மற்றும் பல காரணங்களாலும் இத்தனியனைப்பற்றியும் திருமண்காப்பைப்பற்றியும் உண்மையைக் கண்டுபிடிக்க வேணுமென்று அடியேனுக்கு நெடுநாளாகவே ஆவல் இருந்ததனால் பல ஆராய்ச்சிகள் செய்யலாயின. அவற்றை வெளியிடுதற்கு இப்போது தைவவசாத் அவகாசம் கிடைத்தது. விவாத பாத்ரத்தனியன் ஏறியுள்ள ஓலை ஸ்ரீகோசம் ஓரிடத்திலாவது கிடைக்குமா என்று மிக அலைந்து பார்த்தும் ஒன்றுகூட அடியேனுக்குப் புலப்படவில்லை.

11. மைஸூரிலுள்ள ஸ்ரீபரகாலமடத்திற்கே சென்றிருந்தேன். மஹாகவிவரராக எழுந்தருளியிருந்த ஸ்ரீ பரகாலஸ்வாமி அடியேன் பால் பரமக்ருபாளு. கீலக௵த்தில் அங்கு ஸமாகமம் நேர்ந்தபோது அந்த மடத்திலுள்ள ஓலை ஸ்ரீ கோசங்களையெல்லாம் அவிழ்த்து ஸேவிக்க ஸ்வாமிநியமநம் பெற்றுக்கொண்டேன். தேசிக ஸம்ப்ரதாய க்ரந்தங்கள் பலவும் எடுத்து ஸேவித்தேன். ஒவ்வொன்றிலும் ஸ்ரீமாந் வேங்கட தனியன் உள்ளதேயன்றி பாத்ரத் தனியன் ஒன்றிலும் புலப்படவில்லை. ஆனது பற்றியே நாம் இதனை ஈண்டு நிஸ்ஸங்கோசமாக எழுதலானோம். இவ்விஷயத்தை அப்போதே நாம் ப்ரபஞ்சனம் செய்தோம். அதற்குப்பிறகு யாரேனுமொருவர், விழித்துக்கொண்டு ஓலையேட்டிலும் இந்தத்தனியனை ஏற்றிவைக்க வேணுமென விரும்பி ஏதாவது வேலைத்திறங்கள் செய்திருக்கலாமோ என்று நமக்கு ஒரு சங்கையுமுண்டு. ஆனாலும் நமக்குக் கவலையில்லை. ஸுப்ரஸித்த ராஜகீய புஸ்தகாலயங்களில் சென்று ஒரு விபர்யாஸமும் விளைக்க முடியாதன்றோ. தேசிகனுடைய தமிழ் க்ரந்தங்களான ஓலை ஸ்ரீகோசங்களை ஸ்ரீமாந் வேங்கட தனியனே உள்ளனவாகவும் பாத்ரத் தனியனுடைய ப்ரஸக்திலேசமுமற்றனவாகவும் நாம் பலபல காட்டுவோம். இதை மறுக்க முடியாதே. இதனால் ஏற்படுகிற உண்மையை யார் அபலபிக்ககிற்பார்?

12. திருவெவ்வுளூர் முதலான நாலைந்து திவ்யதேசங்களில் இந்தத்தனியனுக்குச் சிலகாலமாய் ப்ரவேசமிருப்பது கொண்டும் உண்மையை மாற்றவொண்ணாது. இங்ஙனே சில திவ்ய தேசங்களை ஸ்தலவாஸிகள் பறிகொடுத்து விட்டாலும் அவ்விடங்களில் இடையில் ஸம்

பவித்த கோளாறுகளையும் புராதநஸ்திதியையும் உள்ளபடி காட்டவல்ல ரிகார்டுகள் அழிந்து போகவில்லை. அடியேனுக்குத் தெரிந்தவரையில் திருவெவ்வுளூரிலும் திருவஹீந்திரபுரத்திலும் ஒரு பெட்டி ரிகார்ட்டுகள் நாளைக்கும் சேமிக்கப்பட்டுள்ளன. அவற்றில் முக்கியமானவை அச்சாகி வெளிவந்து ப்ராமாணிகர்களை மகிழ்விக்கின்றன.

[திருவெவ்வுளூரில் ரிகார்டுகள் நீதிமன்றத்து விவாதத்தில் வெற்றிபெறுவிக்கவில்லை யாகிலும் அதைப்பற்றி நமக்கு விசாரமில்லை. ப்ராசீனஸ்திதியைத் தெரிவிக்கின்ற ரிகார்டு களன்றோ அவை. மாமூலாகச் சொல்லிவந்த ஸ்ரீசைலேசத்தனியனை விட்டுப் புதிய ராமாநுஜ பாத்ரத்தனியனை அஹோபிலம் ஜீயர்ஸ்வாமிகள் சொன்னதற்காக எத்தனை தடவை அவர் ஷெ ஸன்னிதி கைங்கர்யத்திலிருந்து விலக்கப்பட்டார்? புதுத்தனியனை இனிச்சொல்லுவதில்லை என்று ஜீயரே எத்தனை தடவை எழுதிக்கொடுத்தார் என்பதெல்லாம் நன்கு விளங்குகிறதே.]

13. மணவாளமாமுனிகளைக் காட்டிலும் வேதாந்ததேசிகன் முற்பட்டவராதலால், மாமுனிகளின் தனியனை ஸ்ரீசைலேச தயாபாத்ரத்திற்காட்டிலும் தேசிகனுடைய தனியனே முற்பட்டிருக்கத் தகுந்தது—என்று பொதுவாக அனைவரும் எண்ணக்கூடியது. இதில் நாமும் விப்ரதிபத்தி யுடையோமல்லோம். மாமுனிகளின் தனியனைக்காட்டிலும் தேசிகன் தனியனே முற்பட்டது என்பது மிகவும் யுக்தம். அந்தத்தனியன் ஸ்ரீமாந் வேங்கட நாதார்ய: என்பதே யல்லது 'ராமாநுஜதயாபாத்ரம்' என்பதல்ல—என்று விசதமாக நிரூபித்தாயிற்று.

14. ஆனால் 'ராமாநுஜதயாபாத்ரம்' எப்போது பிறந்தது? எங்ஙனம் பிரசாரமடையத் தொடங்கிற்று? என்னும் விஷயங்கள் இனி விமர்சிக்கப்படவேண்டும். அருளிச்செயல் களை அநுஸந்திக்கத் தொடங்கும்போதுகளில் உபகாரஸ்ம்ருதியாக ஆசார்யர்களின் தனியன் கள் அநுஸந்திக்க ப்ராப்தமானால் அவர்களுள் முற்பட்டவர்கள் யாவரோ அவர்களுடைய தனியன்களை அந்த வரிசைக் கிரமமாக அநுஸந்திப்பது முறைமையாகும். இங்ஙனே யாமிடத்து ஸ்ரீமாந் நாதமுனிகள் போல்வாரான பூர்வாசார்யர்களுடைய தனியன்தான் முதன் மைபெறவேண்டும். * சடகோப தயாபாத்ரம் ஜ்ஞானவைராக்ய சேவதிம். அகாதபகவத் பக்திம் வந்தே நாதமுனிம் குரும் * என்று ஒரு தனியன் இருந்து திவ்யப்ரபந்தாரம்பங்களில் அநுஸந்திக்கப்பட்டு வந்திருக்குமாகில் நன்றே. ஆனால் அங்ஙனம் வந்திருக்கவில்லை. உடையவர் வரையில் அந்தந்த பிரபந்தங்களுக்கு அந்தந்த ஆழ்வார்களுடைய தனியன்கள் அநுஸந்திக்கப்பட்டு வந்தன. பிறகு கூரத்தாழ்வான் காலத்தில் * லக்ஷ்மீநாத ஸமாரம்பாம்* * யோ நித்யமச்யுத*மாதாபிதாயுவதய: * என்கிற தனியன்கள் ஸகலப்ரபந்தங்களுக்கும் பொதுத் தனியன்களாக அநுஸந்திக்கப்படுமாறு ஸங்கேதம் ஏற்பட்டது. பட்டர் காலத்தில் * பூதம்ஸரச்ச மஹாதாஹ்வய * என்கிற தனியனும் அவற்றோடு சேர்க்கப் பட்டது. இவை திவ்யப்ரபந்தாநுஸந்தான ஆரம்பத்திற்கு மாத்திரமே ஏற்பட்டன. அநுஸந்தாந முடிவில் ஒரு தனியனுமில்லை. வாழித் திருநாமமுமில்லை. முடிவில் பல்லாண்டு பல்லாண்டு என்று தொடங்கி 'அப்பாஞ்ச சன்னியமும் பல்லாண்டே' என்று முடிப்பதுவே வழக்கமாயிருந்தது.

15. பிறகு மணவாளமாமுனிகளின் காலத்தில் ஏற்பட்ட விஷயங்கள் ஜகத்ப்ரஸித்த மானவை. அவை மாமுனிகளின் காலத்திலேயே அவருடைய சிஷ்யர்களால் சம்பூருபமும் காவ்யரூபமும் ஸ்தோத்ரரூபமுமான க்ரந்தங்களில் வடமொழியிலும் தென்மொழியிலும் அமைக்கப்பட்டு விளங்குகின்றன. அவை புராதன ஓலை ஸ்ரீகோசங்களாக அனேகம் கிடைக்கின்றன. அவை எழுதப்பட்டு எத்தனை நூற்றாண்டுகள் ஆகியிருக்கு மென்பதையும்

தடஸ்தர்கள் ஊன்றிப் பார்க்கலாம். மாமுனிகளின் திருவடிகளில் ஒருவரான அப்பிள்ளை யருளிச்செய்த நாள்பாட்டு வாழித்திருநாமத்தில் "இப்புவியிலரங்கேசர்க்கு ஈடளித்தான் வாழியே" என்றும் "எப்புவியும் சீசைல மேத்தவந்தோன் வாழியே" என்றும் அமைக்கப் பட்டு நித்யாநுஸந்தாநமாக வந்திருக்கிறது. இவ்விஷயங்களெல்லாம் 400 வருஷங்களுக்கு முற்பட்டவையாக மதிக்கக்கூடிய ஓலை ஸ்ரீகோசங்களில் பல ஆசார்ய புருஷர்களின் திருமாளிகைகளிலும் மடங்களிலும் ராஜகீய புஸ்தகாலயங்களிலும் காணக்கிடைக்கின்றன. கிம்பஹுநா? ஸ்ரீதேசிகனுடைய திருவவதார ஸ்தலமான தூப்புல் ஸந்நிதியுட்பட ஸகல ஸந்நிதிகளிலும் ஸகல திவ்ய தேசங்களிலும் தொன்றுதொட்டு ஏகரூபமாக நடைபெற்றுவருகின்ற ஆசாரம் அபலபிக்கமுடியாதது. அத்தலங்களிலெல்லாம் ராமாநுஜதயாபாத்ரமும் அதைச்சேர்ந்த வாழித்திருநாமம் முதலியவைகளுமே அநுஸந்தாநத்தில் இருந்துவந்தன வென்றும், இடையில் எப்போதோ மாறிவிட்டனவென்றும் இனி இவர்கள் சொல்லத் துணியவேண்டும். எதுவும் சொல்லிவிடலாம்; உலகர் நம்பவேணுமே. ஔசித்யமும் காணவேணுமே. பாத்திரத்தனியன்சண்டை புகுந்தவிடங்களில் "நூதனமாக இந்தப்பாத்திரம் தொடங்கினார்கள்" என்கிற ஹாஹாகாரமும் அதன்மேல் விசாரணைகளும் ராஜதண்டனைகளும் ஸம்ப்ரவஹித்தனவல்லவா? ஸ்ரீசைலேசதயாபாத்ரம் நூதனமாகச் சொல்லத் தொடங்கினார்களென்று ஒருதலத்திலாவது ஒருபேச்சாகிலும் கிளம்பினதுண்டோ? ஆக்ரமித்தல், இழத்தல் என்று இரண்டு உண்டு; ஆக்ரமிப்பவர்கள் யார்? இழப்பவர்கள் யார்? என்பதை உலகமறிந்தேயுள்ளது.

16. மருமமறியாத சிலர்—"தேசிகனுக்கு திவ்யப்ரபந்தங்களில் ஈடுபாடு இல்லையா? அவற்றை இவர் காப்பாற்றவில்லையா? வளர்க்கவில்லையா? அவற்றுக்காக இவர் எவ்வளவோ பாடுபட்டிருக்கவில்லையா? இவருடைய தனியனில் எதற்காக விப்ரதிபத்திகொள்ளவேணும்" என்று வாதிக்கிறார்கள். கேண்மின்; நாதமுனிகள் ஆளவந்தார் எம்பெருமானார் ஆழ்வான் பட்டர் நம்பிள்ளை பிள்ளைலோகாசாரியர் திருவாய்மொழிப்பிள்ளை முதலான ஆசார்யர்களுக்கும் இந்தப்பெருமைகள் பெரும்பாலும் இருந்தாலும் அன்னவர்களில் ஒருவருடைய தனியனும் இத்தகைய கௌரவம் பெறவில்லை யென்பது யாவரும் இசைந்த விஷயம். விலக்ஷணமானவொரு பகவந்நியமந விசேஷத்தினால் ஒரு ஆசார்யருடைய தனியனுக்கும் வாழித் திருநாமத்திற்குமே இத்தகைய பெருமை ஏற்பட்டது. அந்த ஆசார்யர் மணவாள மாமுனிகள் ஒருவரேயன்றி மற்றொருவரல்லர் என்னுமிடம் அசைக்கவொண்ணாதது.

17. ராமாநுஜதயாபாத்ரம் தேசிகன் காலத்திலேயே அவதரித்து அப்போதே ஸந்நிதிகளிலும் க்ருஹாதிகளிலும் பிரசாரமும் பெற்று மேன்மையடைந்திருக்குமாகில் அந்த அநுஸந்தாந பரம்பரை இடையறாமல் வந்தேயிருக்கும். ஓரிடத்திலும் விச்சேதமடையக் காரணமில்லை. அப்போது ஸ்ரீ வைஷ்ணவர்களுள் வேற்றுமையென்பது சிறிதும் ஏற்பட்டிருக்கவில்லை யாதலால் ராமாநுஜதயாபாத்ரத்தையும் அதைச்சேர்ந்த வாழித்திருநாமத்தையும் தேசிகப்பிரபந்தாதிகளையும் அப்போது ஸகல ஸ்ரீ வைஷ்ணவர்களும் ஸந்நிதிகளில் ஆதரித்துப் பரிக்ரஹித்தேயிருப்பர்கள்; அந்த ரீதி மாறுபாடடையக் காரணமேகிடையாது. தேசிகனிடத்தில் பகையும் பொறாமையும் கொண்டவர்கள் அக்காலத்திலுமிருந்தார்களென்று சொல்லி அதனால் வேறுபாடு உண்டானதாகச் சொல்லித் தீரவேண்டுமிவர்கள். உண்மை அப்படி இருக்குமானால் அந்த ஸமயத்திலேயே பிள்ளை லோகாசார்யர் விஷயமான தனியன் வாழி திருநாமங்கள் அதற்குப் போட்டியாக ஏற்பட்டிருக்கும். 70, 80 வருஷங்கள் பொறுத்து

மணவாள மாமுனிகளின் தனியனும் வாழித்திருநாமமும் போட்டியாக வந்துபுகுரமாட்டா தென்பது திண்ணம். கலி(ஸுவ) 4440ல் ராமாநுஜதயாபாத்ரம் ஜனித்து அப்போதே ஸந்நிதிகளி லும் பிரசாரம் அடைந்திருந்ததாகவே வைத்துக்கொள்வோம். அப்போது அந்தத் தனியன் முதலியவற்றை ஸந்நிதிகளில் ஓதிவந்த அத்யாபகர்கள் யாவர்? அவர்களுடைய பரம்பரை இப்போது இருக்கின்றதா இல்லையா? என்று விமர்சிக்கவேண்டும். இவ்வாராய்ச் சிகளையெல்லாம் நாம் செவ்வனே செய்து பலபல உண்மைகளை உலகமுகக்க வெளியிட வல்லோம். ஒன்றையும் விடாது எல்லாவற்றையும் வெளியிடுகிறோம்.

18. இக்காலத்தில் நாம் ஸேவித்துவரும் ஸ்ரீவைஷ்ணவஸமுதாயத்தில் ஒருவகுப்பு— திவ்யப்ரபந்தங்களில் அபிமானமுடையதும், மற்றொருவகுப்பு – அந்த அபிமானமற்றதுமா யுள்ள தென்னுமிடம் மறுக்கவொண்ணாதது. அபிமானமற்ற வகுப்பினர்கள் (1) வைதிக கர்மா நுஷ்டானங்களில் அதிக நோக்குடையவர்களாயும், (2) குளக்கரைகளிலேயே பெரும்பாலும் போதுபோக்குமவர்களாயும் (3) ஸந்நிதிகளில் வந்தாலும் நூற்றுக்கணக்கான நமஸ்கார ப்ரத க்ஷிணாதிகளைச் செய்துவிட்டு * ஆசுச்சிசாந: * இத்யாதிகளை ஓதி மீள்பவர்களாயும், (4) திவ்யப்ரபந்த ஸேவைகளில் இகழ்வுடையராயும், (5) 'இப்பாட்டுகள் அவைதிகசப்தம்' என்று சொல்லி அதிலே சிறிதும் செவிகொடாதவர்களாயும், (6) இயல் நடக்குமிடங்களில் தலைகாட்டவும் விரும்பாதவர்களாயும் இங்ஙனே ஷாட்குண்ய பரிபூர்ணர்களாய் இருந்து வந்தவர்கள். [இன்னமும் பலர் இப்படியேயிருந்து வருகிறார்கள்.]

19. மஹாவித்வானுகப் புகழ்பெற்றிருந்த அரசாணிபாலை. வேங்கடாத்வரி இயற்றிய ஜகத்ப்ரஸித்தமான விச்வகுணாதர்சத்தில் ஸ்ரீபெரும்பூதூர் வருணனையில் அங்குள்ள ஸ்ரீவைஷ் ணவர்களைப்பற்றி க்ருசாநுவின் வார்த்தையாகச் சில விஷயங்கள் தெரிவிக்கப்பட்டுள்ளன. இப்போது தென்கலையார்கள் என்று வியவஹரிக்கப்பட்டு வருகின்ற ஒரு வகுப்பினரைச் சுட்டியே அவை பிறந்தனவென்பது நிர்விவாதம். வைச்வதேவம் முதலியவற்றை விட்டவர் கள் என்றும், க்ருஹாராதனத்தில் திருப்பணி ஸேவிப்பதை விட்டவர்கள் என்றும், ஸக்ருத்ப்ர ணாமம் செய்பவர்கள் என்றும்—இங்ஙனே பலகுறைகள் கூறி வருகையில், ஸம்ஸ்க்ருத வேதத்தை உபேக்ஷித்துத் தமிழ்ப்பிரபந்தங்களை விசேஷமாக ஆதரிப்பவர்கள் என்றும் குறை கூறியுள்ளது. * நைஷாம் ந்யாய்ய இஹ த்விஜாந்வயஜுஷாம் பாஷாப்ரபந்தே ச்ரமோ வேதே விச்வமூர்த்தஸாதநவிதௌ பத்தாதரே ஜாக்ரதி * இத்யாதி சுலோகங்கள் காண்க.

20. இதனால் என்ன ஏற்படுகின்ற தென்பதை மத்யஸ்தர்களான விவேகிகள் நன்கு தெளியவேணும். வைச்வதேவாதிகளை அனுஷ்டிப்பவர்களும், ஆராதனத்தில் பணிஸேவிப் பவர்களும் அஸக்ருத் நமஸ்காரம் செய்பவர்களுமான வகுப்பினர் தமிழ்ப்ரபந்தங்களைத் தள்ளி வேதத்தையே விரும்புமவர்கள் என்றும், இதற்கு எதிரிடையான வகுப்பினர் தமிழ்ப் பிரபந்தங்களிலேயே போதுபோக்கு மவர்கள் என்றும் விச்வகுணாதர்சகாரர் ஸ்பஷ்டமாகத் தெரிவித்தாராகிறார். வைச்வதேவாதிகளை அனுஷ்டிப்பவர்களான வகுப்பினரும் தமிழ்த் திவ்யப்ரபந்தங்களில் பிரவேச முடையவர்களாக அப்போது இருந்திருப்பர்களாயின் இந்த விச்வகுணாதர்சகாரர் இப்படி சுலோகங்களை இயற்றியிருப்பரா? இக்கேள்விக்கு நேர்மையான உத்தரமுரைக்க ஒவ்வொருவரும் முன்வரவேணும். அவர் தமது காலத்தில் தம்கண்ணால் என்ன நிலைமை கண்டாரோ அதைத்தான் எழுதிவைத்திருக்கிறார். அப்புத்தகம் ஜனித்து இற்றைக்கு 250 வருஷங்களுக்குமேல் ஆகிறது. 22—7—38ல் வெளிவந்த சுதேச மித்திரனில் ராமாநுஜ தயாபாத்ர மஹோத்ஸவமென்ற மகுடத்தின்கீழ் உ. வே. வி. வி. ஸ்ரீநி

வாஸய்யங்கார் ஸ்வாமிகள் வடகலையார்கள் வெகுகாலமாகவே திவ்யப்ரபந்தங்களில் நிராதரவு காட்டி வருகிறார்களென்று தாம் பரிதாபங்காட்டி யெழுதியிருப்பது கொண்டும் உண்மையை யுணரலாம்:

21. விச்வகுணாதர்சத்தில் கூறியிருக்கிறபடியே தமிழ்த் திவ்யப்ரபந்தங்களைப் பற்றிக் கொண்டு வைச்வதேவாதிகளை விட்டவர் யாவர்? என்று கேட்டால் * ஸ்ரீசைலேச தயா பாத்ரத்தைப் பற்றி நிற்கிற நாங்களே என்று கைதூக்கிக்கொண்டு முன்வர நாங்களன்றோ ஸஜ்ஜர்களாயிருக்கின்றோம். அந்த விச்வகுணாதர்சகாரர் ஆஷேபணையாகக் கூறியுள்ளவற்றை ஒருகாலும் மறக்க முயல்வோமல்லோம் நாம். அவற்றைப் புகழுரையாகவேகொண்டுசாலவும் மகிழ்ந்து வருகிறோம். 'நாங்கள் வைச்வதேவம் அனுஷ்டிப்பவர்களே' என்றாவது பலகால் நமஸ்கரிப்பவர்களே என்றாவது, மணியடிப்பவர்களே யென்றாவது ஒருநாளும் சொல் லகில்லோம். தமிழ்த் திவ்யப்ரபந்தங்களைப் பரம்பரையாக ஆதரித்து வருமவர்கள் நாங் களே என்று உத்கோஷிக்கவும் நாங்களே யன்றோ உரிமையுடையோம். இந்த உரிமை பிறர்க்கு இருக்கப்ரஸக்தியில்லை யென்பதை விச்வகுணாதர்சக்ரந்தமும் வி. வி. ஸ்ரீநிவாஸய்யங் காரின் வியாஸமும் நிலைபெறுத்தி வைத்துளதே.

22. ஆசிரியர்காள்! ஒன்றுன ஸ்ரீதாதாசார்யருடைய பாகினேய பௌத்திரரான விச்வ குணாதர்சகாரருடைய காலம்வரையில் இந்த ராமாநுஜ தயாபாத்ரவகுப்பினர்கள் அமுதினு மாற்ற வினிய அருளிச்செயல்களைச் சோற்றுப்பாட்டு என்றும் பண்டாரப்பாட்டு என்றும் பல வாறாகப் பழித்துக் கொண்டிருந்தவர்களை யென்பதில் ஸந்தேஹிப்பவர் யாவர்? இப்பழிப்பு மொழிகள் மேற்கூறிய வகுப்பினரிடத்தில் இன்னமும் தொலைந்தபாடில்லையே. இப்படி திவ்யப்ரபந்தங்களையும் தக்கர்த்தாக்களையும் வசைபாடிக்கொண்டு அர்ச்சாவதாரத்திலே பெரும்பாலும் விலகிநின்ற வகுப்பினர் இன்றையன்று விச்வகுணாதர்சத்தினால் தெரிவது போலவே அறுநூறு ஆண்டுகட்கு முன்னம் அவதரித்த ஆசார்ய ஹ்ருதயத்தினாலும் நன்கு தெரியவருகின்றது. அதில் "முற்பாடர்க்கு க்ரியாங்கமானவை யிரண்டும்" என்று தொடங்கி "உத்பத்தி நிரூபிக்கும்" என்பதளவாகவுள்ள சூர்ணிகைகள் காண்க.

23. ஆகவிப்படி திவ்யப்ரபந்தங்களிலே உதாஸீநர்களாயும் பகையாளர்களாயுமிருந்தாருடைய வகுப்பு நாளைக்கும் அவிச்சிந்நஸ்ரோதோரூபேண இடையறாது வந்து கொண்டிருக் கின்றதென்பதை உலகமறியும். இவ்வகுப்பில் தலைநின்றிருந்த சிலர் சில ஆண்டுகட்கு முன்பு * தத்ரைவ கேபி சபலாச் சலபீபவந்தி * என்ற கணக்கிலே அருளிச்செயல் கோஷ்டி யிலே புகுரத் தொடங்கினார்கள். எதனாலே யென்னில், அது கேண்மினோ. ஏறக்குறைய இருநூறு ஆண்டுகட்கு முன்பிருந்த மைஸூர் மஹாராஜர் ஒருவர் திருநாராயணபுரம் ஜீயர் ஸ்வாமி யொருவரிடத்தில் பகவத்விஷயம் கேட்டுக்கொண்டிருந்தார். அப்போது, திவ்யப்ர பந்தமறியாதார் வகுப்பில் சேர்ந்தவரான ஒரு யதியும் அங்குச் சென்று அந்த மஹாராஜர்க் குத் தாமும் சில இதிஹாஸ புராணங்களின் ப்ரவசநம் செய்து வந்தார். இந்த யதிகளுக்கு பகவத் விஷயத்தில் ப்ரவேசமில்லாமை கண்ட மஹாராஜர் "சிறந்த ஜ்ஞாதாவாகிய இந்த யதிகட்கு பகவத் விஷய ஜ்ஞானஸம்பத்தும் ஏற்பட்டால் நல்லதாகுமே" என்றெண்ணி ஒரு நாள் ஜீயர்ஸ்வாமியின் பகவத் விஷய ப்ரவசனம் கேட்க எழுந்தருள வேணுமென்று யதிகளை (ராஜா) அழைத்தார். அன்று இவரும் சென்று செவிக்கினிய செஞ்சொற்களைக் கேட்டவாறே 'இதுவரை நாம் ஸம்பாதித்த ஞான மெல்லாம் சில்பகநிபுணமத்தனை; இந்த ஜீயர் ஸ்வாமியின் ஞானமே ஞானம்; இந்த ஸூக்திகளே திவ்ய ஸூக்திகள்' என்று ஹார்த்த

மாகக் கொண்டாடிவிட்டு, அப்போதே அந்த ஜீயரை அடிபணிந்து அருளிச்செயல் மூலத்தையும் வியாக்கியானங்களையும் அதிகரிக்க ஆரம்பித்துச் சில வருஷங்களில் பகவத் விஷய ப்ரவசநப்ரவீணராகி அந்த மஹாராஜர்க்கு அதைத் தாமும் ப்ரவசனஞ்செய்து செல்வச் சிறப்புகளும் பெற்றார். அவரே திருவாய்மொழிக்கும் மற்றுஞ்சில திவ்யப்ரபந்தங்களுக்கும் தாமுமொரு சிறு வியாக்கியானம் செய்தார். அவர்க்கு ராஜவால்லப்யமும் விசேஷமாக வுண்டாயிற்று. சிஷ்யர்களும் சிலர் அடிபணியத் தொடங்கினர்கள். அவர்களுக்கும் அருளிச்செயல்களைப் பயிற்றுவித்துப் பத்தெட்டு பேர்களை அத்யாபகராக்கினர். அவர்களையு மழைத்துக்கொண்டு தக்ஷிண திவ்ய தேசயாத்திரை புறப்பட்ட அந்த யதிகள் முதன்முதலாகத் திருநாராயணபுரத்திலே சென்று, அங்கு செல்வப்பிள்ளை ஸந்நிதியில் ஸாது ஸ்ரீ வைஷ்ணவர்கள் நடத்திப்போரும் அருளிச்செயல் கோஷ்டிகளிலே அந்த சிஷ்யர்களை அந்வயிப்பித்தார். அதன் பிறகு நடந்த செய்திகளெல்லாம் நமக்கு விரிவாக விளங்கவில்லை. ஒரு கன்னட பாஷைப் புஸ்தகத்தில் விரிவாக வுள்ளதாம்.

24. அப்போது அந்த திவ்ய தேசத்திலே முதன்மையாகத் தனியன் விவாதம் விளைந்தது. *ராமாநுஜ தயாபாத்ரத்தனியன் திருநாராயணபுரத்தில் ஜனித்தது என்று இவர்கள் எழுதியிருப்பதொன்று உண்மையே. காலத்தை வேறுபடுத்தினலும் தேசத்தை வேறுபடுத்திற்றிலர். இது நிற்க. அங்கு விவாதம் விளைந்து ஸாது ஸ்ரீ வைஷ்ணவர்கள் மைஸூர் ஸம்ஸ்தான நீதி ஸ்தலத்தில் வியவஹாரம் தொடுத்தனராம். "புதியதோ பழையதோ அது நமக்குத் தெரியாது. யாராயினும் எதையாயினும் சொல்லிக்கொள்க; ஆக்ஷேபித்துச் சண்டையிடுமவர்கள் யாராயிருந்தாலும் தண்டனைக்கு ஆளாவர்கள்" என்கிற முடிவுதான் ராஜஸ்தானத்தில் ஏற்பட்டதாம்.

25. பிறகு அந்த யதிகள் தென்னாட்டிலும் யாத்திரைசெய்து அந்தத் தனியனை ஆங்காங்கு புகுரச்செய்யப் பெரும்பாடுகள் பட்டார். காஞ்சீபுரத்தில் அவருடைய போதனையை ஏற்றுக்கொள்ள மறுத்த ஒரு தாதாசார்யருடைய க்ருஹத்வாரத்தில் (அந்தயதிகள்) சாபோதகமிட்டுப் போனரென்பது ஸுப்ரஸித்தம். சண்டைகள் ஏற்படுவதற்கு அவரே பீஜாவாபம் செய்தவர். அவர் தமதுகொள்கையைச் சிலர்க்கு உறைப்பாக ஊட்டியிருந்ததனால் அதன்பயனாக நாலைந்து க்ஷேத்திரங்களில் இந்தத் தனியனுக்கு ஒரு காலத்தில் ப்ரவேசமுண்டாயது. அவ்விடங்களில் ஏற்கெனவே யிருந்துவந்த ஸாது ஸ்ரீவைஷ்ணவர்களை பலாத்காரத்தாலே பங்கப்படுத்தியே ஆக்ரமணம் நடந்ததென்பது உலகமறிந்ததேயாதலால் இதில் விரிவுவேண்டா. ராமாநுஜ தயாபாத்ரத்தைப்பற்றி 144 ஆர்டர்கள் எத்தனை; சாச்வத இஞ்ஜங்ஷன் உத்தரவு அமைந்த ஜட்ஜ்மெண்டுகள் எத்தனை; மீறி அதனை உத்கோஷித்தவர்களுக்கு நேர்ந்த ராஜதண்டனைகள் எத்தனை—என்கிற இவ்விஷயங்களைப்பற்றின விரிவுரைகள் தனியே ஒரு நூலில் காணத்தக்கவை.

26. ஸாரதமமான விஷயம் குறிக் கொண்மின். பழைய செய்திகளை உள்ளபடி நிர்ணயிக்கவேண்டுமானல் புராதந சாஸநங்களைத் தேடுகிறோமென்பது நிர்விவாதம். ப்ரக்ருதவிஷயத்தில் விச்வகுணதர்ச க்ரந்தமே நமக்குக் கண்ணழிவற்ற சாஸனம். உலக நிலைமைகளை உணர்த்துகைக்காகவே யன்றோ அந்த நூல் அவதரித்தது. இப்போது ராமாநுஜ தயாபாத்ரத்தைப் பற்றியிருக்குமவர்கள் யாரோ, இவர்கள் முன்பு வைச்வதேவாதி கருமங்களைவிட்டவர்களாயும் ஸக்ருத்ப்ரணமமே செய்பவர்களாயும் திருவாராதனத்தில் திருமணி ஸேவியாதவர்களாயு மிருந்ததாக ஒப்புக்கொள்ள முடியுமானல் "இவர்கள் தொன்று தொட்டு திவ்ய

ப்ரபந்தாநுஸந்தான நிரதர்கள்" என்று சொல்ல அவகாசம் கிடைக்கும். அங்ஙனம் இசையகில்லாத இவர்கள் திவ்யப்ரபந்த ஸம்பந்த லவலேசமு மில்லாமலே போந்தவர்கள் என்று நிர்ணயிக்கப்பெற ஒருதடையுமில்லை. தமிழ்ப்பாஷை அடியோடு நடையாடாத வட இந்தியாவிலுள்ளவர்களுக்கூட இப்போது வெகு பரிச்ரமப்பட்டு திவ்யப்ரபந்தம் அதிகரித்து வருதல் போல இவர்களும் 100-200 வருஷங்களுக்கு உட்பட்ட காலத்திலே திவ்யப்ரபந்தம் அதிகரிக்க ஆரம்பித்தவர்கள். ஆங்காங்கு ஸந்நிதிகளில் ஒரு வகுப்பினர் திவ்யப்ரபந்தங்களை ஓதி அதத்ப்ரயுக்தமான பெருமைகளைப் பெற்று வருவது கண்டு அதிற் பொறாமையினாலே தாங்களும் திவ்யப்ரபந்தங்களை அதிகரிப்பவர்களென்று காட்டிக்கொண்டு உள்ளே புக ஆரம்பித்த வந்தனையே யல்லது போக்யதா புத்தியினால் புகுந்தமையில்லையென்று நாளேக்கும் நடத்தைகளினால் தெரிய வருகின்றது.

27. இப்படிப்பட்ட இவர்கள் 100-200 வருஷங்களுக்கு முன்னே ராமாநுஜதயாபாத்ரத்தைக் கொண்டு என்ன காரியம் செய்து வந்தார்களென்பதை ப்ராமாணிகமாக ஒருவர் நிரூபித்து விடுவரானால் அத்தனியன் ஜனித்து 600 வருஷமாயிற்று என்பதை தாராளமாக இசையலாம். இவ்வொரு விஷயமே மிக முக்கியமாக நோக்கத்தக்கது. "அபிச்ரவண புருஷஸூக்த புண்யாஹவாசநாதிகளுக்குத் தனியனை ராமாநுஜ தயாபாத்ரத்தை முன்பு உபயோகப்படுத்திவந்தோம்" என்று சொல்லுகிற பக்ஷத்தில் இதன்மேல் வாய்திறக்க நமக்கு வழியில்லைதான்.

28. மற்றொன்றும் கேளீர்; இவர்கள் தென்னாசார்யர்களோடு கலந்து இயல்ஸேவிக்கத் தொடங்கின காலத்தில் பாத்திரத்தனியன் வாழிதிருநாமம் ஆகிய இவற்றில் மாத்ரமே தங்களுக்கு வைமத்ய மிருப்பதாகக்கொண்டு இவ்விரண்டிலும் ஒரு விச்வாமித்ரஸ்ருஷ்டியைப் பண்ணினார்கள். மற்றவற்றை மாற்ற விரும்பினார்களில்லை. அதாவது—* ஸர்வதேச தசாகாலேஷு * ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா ப்ரதிவாஸரமுஜ்ஜ்வலா * கோதைபிறந்தவூர் * (உடையவர் வாழிதிருநாமமாகிய) சீராருமெதிராசர் இத்தியாதிகளான மூன்று பாசுரங்கள் ஆகிய இவற்றையெல்லாம் அப்படியே ஸேவிக்க இசைந்து விட்டார்கள். மேற்குறித்த ச்லோகங்களும் பாசுரங்களும் மணவாளமாமுனிகளாலும் ததீயர்களாலும் பணிக்கப்பட்டவை என்று தெரிந்துகொண்ட பின்பு என்ன செய்திருக்கிறார்க ளென்பதை ரஸிகர்கட்குத் தெரிவிக்கின்றோம். உடையவருடைய வாழிதிருநாமங்களான மூன்று பாசுரங்கள் மணவாள மாமுனிகள் அருளிச்செய்த ஆர்த்திப்ரபந்தத்தில் சேர்ந்தவை யென்பதைப் பலவூரார்கள் தெரிந்துகொண்டு அவற்றை யநுஸந்திப்பதை விட்டொழித்தார்கள். கோதைபிறந்தவூர் இத்யாதியான இரண்டு பாசுரங்கள் யாமுனிகளின் திருவடிகளால் இயற்றப்பட்டவை என்பதை யறிந்தபின்பு அவற்றை அநுஸந்திப்பதையும் நிறுத்திக்கொண்டார்கள். சிலவூர்களில் மேற்சொன்ன உடையவர் வாழிதிருநாமம் முதலியவற்றைத் தாம் நிவர்த்திக்க முடியாமல் அவை உடையவர் காலத்திலேயே அவதரித்தவை யென்று காட்ட ஒவ்வொன்றுக்கு ஒவ்வொருவரை [ஆழ்வான் ஆண்டான் பிள்ளான் எச்சான் என்பவர்களைக்] கர்த்தாக்களாக எழுதிவைத்து முத்ரணமும் செய்துள்ளார்கள். * ஸர்வதேச தசாகாலேஷு பெரியஜீயர் அருளிச்செய்தது என்றே முத்ரணம் செய்துள்ளார்கள். இந்தப் பெரியஜீயர் உண்மையில் மணவாள மாமுனிகளே. நஞ்சீயர்க்கும் பெரியஜீயர் என்று வ்யவஹார முண்டென்று கூறிவிடுவர்கள். அது நிற்க. அதற்கு அடுத்ததான * ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா ப்ரதிவாஸரமுஜ்ஜ்வலா, திகந்த வ்யாபிநீ பூயாத் ஸாஹி லோக ஹிதைஷிணீ * என்கிற ச்லோகம்

மணவாள மாமுனிகளின் அஷ்டதிக்கஜங்களில் ஒருவரான கந்தாடை யண்ணன் அருளிச் செய்தது. இந்த அண்ணனை இன்னாரென்று தெரிந்து கொள்ளகில்லாதவிவர்கள் தங்கள் புத்தகங்களிலும் கந்தாடை யண்ணனருளிச் செய்ததென்றே பதிப்பித்துள்ளார்கள். தேசிக பிரபந்தப் பதிப்பை யெடுத்துப் பார்த்தால் இவையெல்லாம் நன்கு தெரியவரும்.

29. ராமாநுஜ தயாபாத்ரம் ஜனித்து 600 வருஷமாயிற்று என்கிற இப்புதுமையை ப்ரபலப்ரயத்நங்களினால் ஸ்தாபிக்கவெண்ணி ஒரு ஊரில் மஹோத்ஸவம் கொண்டாட நினைப்பதும், மற்றொரு ஊரில் ஞாபக சின்னம் ஸ்தாபிக்க நினைப்பதும், வேறொரு ஊரில் வேறொன்று செய்ய நினைப்பதுமெல்லாம் வஸ்துத: நல்ல காரியங்களேயாதலால், காரணம் அஸமஞ்ஜஸமானாலும் காரியம் ஸமஞ்ஜஸமே யென்றுகொண்டு ஒருவாறு உகப்போம். சித்திரைமாதத்துப் பௌர்ணமியில் ஸ்ரீ க்ருஷ்ணஜயந்தியென்று செய்தி வெளியிட்டு அப்போது ஒருவர் ஒரு மஹோத்ஸவம் நடத்தினால், வாய்மணக்க வுண்போமென்று அங்கும் புகுந்து நிற்பார்போலே இங்கும் புகுந்து நிற்பாரைப்பற்றி நமக்கென்ன விசாரம். இந்தத் தனியனுக்காக ஆங்காங்கு ஏற்பட்ட ராஜதண்டனைக்கு சதாப்த பூர்த்தி, அசீதி பூர்த்தி, ஷஷ்டி பூர்த்தி, பஞ்சாசத் பூர்த்தி, பஞ்சவிம்சதி பூர்த்தி என்று இப்பூர்த்திகளையெல்லாம் நீதிஸ்தல ரிகார்டுகளின்படி கண்டு பிடித்து ஸ்ரீ தேசிகஸந்நிதிகளிலேயே மஹோத்ஸவங்கள் நடத்தவேணுமென்றும் பலர் பாரிக்கலாம்.

30. ஸ்வாமி தேசிகனுடைய திருவவதார ஸ்தலமான தூப்புல் ஸந்நிதியிலும் ஸ்ரீசைலேச தயாபாத்ரமும் அதைச்சேர்ந்த வாழித்திருநாமங்களுமே தொன்று தொட்டு அநுஸந்தானத்திலுள்ளனவேயன்றி அவ்விடத்தில் கூட இந்த நவீனபாத்திரத் தனியன் ஒரு நாளும் புகவில்லையே—என்கிற ப்ரஸ்தாவத்தில் சிலர் சொல்லுவதாவது—"மற்ற ஸந்நிதிகளில் எப்படியானாலும், தேசிகன் ஸந்நிதியில் இப்படியாகலாமா? அநாதி வழக்கம் இங்ஙனே யிருந்திருக்குமா? இதில் மனம் ஸமாதானமடையவில்லையே" என்று.

31. இதற்குப் பெரியோர்கள் பணிப்பதாவது—தேசிகனுக்கும் மணவாள மாமுனிகளுக்கும் ஏதேனும் விரோதமுண்டோ? அஃது ஒன்றும் கிடையாது. மாமுனிகள் தேசிகனுக்குப் பிற்பட்டவராதலால் இவரைப்பற்றின துதிமொழிகளை அவரது முன்னிலையில் எங்ஙனம் ஓதலாம்? என்று கருத்தாகில்; இது அஸமஞ்ஜஸம். ஸகல ஆசார்யர்களும் மாமுனிகட்கு முற்பட்டவர்களேயாதலால் ஒருவருடைய முன்னிலையிலும் * ஸ்ரீசைலேச இத்யாதிகளைச் சொல்லலாகாது என்ன ப்ராப்தமாகும். இந்த விஷயம் தேசிகனுடைய தனியனுக்கும் துல்யம்; ஸ்ரீ வரவரமுநிவ்யதிரிக்த ஸகலாசார்யர்களும் தேசிகனுக்கு முற்பட்டவர்களேயாதலால் எம்பெருமானார் முதலான ஆசார்யர்களின் முன்னிலையிலும் எம்பெருமான் முன்னிலையிலும் அவரது தனியனைச் சொல்லத் தகாதென்று முடிந்து நிற்கும். ஆகவே, பகவந் நியமனமடியாக ஸகல ஸ்தலங்களிலும் ஸமரூபமாக நடந்து வருகின்ற முறைமை தேசிகன் ஸந்நிதியில் மாத்திரம் வேறுபடவேணுமென்று நினைப்பதற்கு நியாயமில்லை. தேசிகன் ஸந்நிதியில் நெடுநாளைய மாமூல் வழக்கப்படிதான் நாளைக்கும் நடந்து வருகின்றதென்பது கீழே காட்டியுள்ள ஸ்ரீமத் திருப்புட்குழி ஸ்வாமியின் கோர்ட்டு வாக்குமூலத்தினாலும் விளங்கா நிற்கும். எந்த விஷயத்திலும் மற்ற ஆசாரியர்களோடு ஒரு கோர்வையாகவே தேசிகனும் எழுந்தருளியிருந்தவராதலால் மற்ற ஸந்நிதிகளில் நடைபெறும் முறைமையே இவருடைய ஸந்நிதியிலும் நடைபெற்றுவருகிறது.

32. *பதியே பரவித்தொழும் தொண்டர்* என்றும் *கண்டியூரரங்கம் மெய்யம் கச்சிபேர் மல்லையென்று மண்டினார்* என்றும் திருமங்கையாழ்வாரால் மங்களாசாஸநம் பெற்று, "தொண்டைமண்டல வேதியர் வாழவே தூயதென்மறை வல்லவர் வாழவே" என்று நம் தேசிகனாலும் வாழ்த்தப் பெற்று அநாதியாய் எங்கும் விளங்கி வருகின்ற ஸ்ரீவைஷ்ணவர்களும் அவர்களின் கைங்கர்ய ஸாம்ராஜ்யமும் ஒரு நாளும் ஒரு குறையுமின்றி எங்கும் தழைக்கவே.

33. "தேசிகனுடைய தமிழ்க்ரந்தங்களான ஓலை ஸ்ரீகோசங்களெல்லாம் ஸ்ரீமாந் வேங்கட தனியனே உள்ளனவாகவும் பாத்ரத்தனியனுடைய நாற்றமும் அற்றனவாகவும் நாம் பரச்சதம் காட்டுவோம்; இதை மறுக்கமுடியாதே. இதனால் ஏற்படுகிற உண்மையை யார் அபலபிக்கிறார்?" என்றெழுதியுள்ளோம் இதற்குக் கீழே; இந்த வாக்யங்களின் கருத்தை வியாக்யானித்துப் பல பல நுட்பங்களைத் தெரிவிப்போமினி.

34. சில வருஷங்களுக்கு முன் நெல்லூர் ஜில்லாவில் ஒரு ஊரில் ஒரு அத்வைதிவித்வான் (சாஸ்த்ரி) தாம் புதிதாக ஒரு க்ரந்தம் நிர்மாணம் செய்து பண்டிதஸபையில் அரங்கேற்றினார். பண்டிதர்கள் பலரும் அதைச் செவிசாத்தி மிகவும் ஆனந்தித்து அந்த க்ரந்த கர்த்தாவைப் புகழ்ந்து பாராட்டினார்கள். அந்தக்ரந்தத்தை அச்சிடவேண்டிய தென்றும் நிச்சயித்துப் பலர் பொருளுதவியும் புரிந்தார்கள். பிறகு அந்த க்ரந்தம் அச்சுக்கூடம் போய்ச் சேர்ந்து வேலையும் நடந்து வந்தது. இந்த சாஸ்த்ரியிடத்தில் வெகுகாலமாகப் பகையும் பொறாமையும் கொண்டிருந்த மற்றொரு வித்வான் இப்போது எப்படியாவது இவரைப் பங்கப்படுத்த வேணுமென்றெண்ணி அந்த அச்சுக்கூடத் தலைவரை வசப்படுத்திக் கொண்டு அந்த க்ரந்தத்திலிருந்து ஒரு ப்ரதி விரைவாக எழுதிக்கொண்டு சென்று மூன்று நாளைக்குள் அதே ஆநுபூர்வியாய் நாலைந்து ஓலைப்புத்தகங்கள் ஸ்ருஷ்டித்து, புதுமை தெரியாதபடி, உபாயங்களினால் பழைமைப்படுத்தி, சில ஏடுகளில் செல்லரிப்பு, பூச்சிக்கடி முதலியவற்றையும் உண்டாக்கி, வெவ்வேறு ஊர்களிலிருந்து வெகு ப்ரயாஸப்பட்டு இவ்வோலையேடுகளைத் தாம் தருவித்ததாகவும் நிரூபித்து அதே ஊரில் ஒரு வாரத்திற்குள் மறுபடியும் பண்டித ஸபைகூட்டி அந்த ஸபையில் இந்த ஓலையேடுகளைக் காண்பித்து "இந்த சாஸ்த்ரி, ப்ராசீநக்ரந்தத்தைத் தாம் நிர்மாணம் செய்ததாகக் களவு முறையில் காட்டிக்கொண்டாரத்தனை" என்று ஒவ்வொருவரும் உறுதியாய்ச் சொல்லும்படி செய்து சாஸ்த்ரியைப் பரிபவப் படுத்திவிட்டார். ஆனாலும் சாஸ்த்ரிகள் தம் உள்ளத்தில் உண்மை யுணர்ந்தவராதலால், மிக முயன்று எதிராளி செய்த சூது வேலையை நாலு நாளைக்குள் கண்டுபிடித்து ருஜுப்படுத்தி விட்டார். பிறகு உண்மை உண்மையாகவே தேறிற்று. இங்ஙனே பல விஷயங்கள் நமக்கு நன்கு தெரியுமாதலால் இதை நாம் ஏற்கெனவே நெஞ்சிற்கொண்டே பிறருடைய சூதுகளுக்கு அவகாசம் ஏற்படாதபடி நம் விவக்ஷிதத்தை ஒழுங்காகவே வெளியிட்டிருக்கிறோம்.

35. ராமாநுஜ தயாபாத்ரமுள்ள ஒரு ஓலைப்புத்தகம் இருப்பதாகவும் அதைச் சிலர் சேகரித்து வருவதாகவும், இத்தனியன் ஜனித்து உண்மையில் 600 வருஷம் ஆகிறதென்பதை எளிதாகவே உலகம் நம்பும்படி செய்துவிடலாமென்று அவர்கள் பேசிக் கொண்டிருப்பதாகவும் நமது காதில் விழுந்தது. ஸூர்ய சந்திரர்களின் கதியை நிரோதம் செய்ய முடிந்தாலும் முடிய லாம்; அடியேனுடைய நிரூபணத்தை அணுவளவும் அசைக்க முடியாதென்பதை வற்புறுத்தியே விளம்புவேன். — ராமாநுஜாபாத்ரம் ஜனித்து 200 வருஷம் ஆகிறது என்பதுதான்

வர்ஷசதயானாலும் ஸித்தாந்தமாகத் தேறி நிற்கும். இதில் எள்ளளவும் ஸந்தேஹப்பட வேண்டா. இன்னமும் விசதமாகவே நிரூபித்து நிலை நாட்டுவேன். ஓலை ஸ்ரீகோசவிஷயத்தில் அடியேனுடைய ஸத்ய வார்த்தைதான் வெற்றி பெறும் என்பதை ஒவ்வொருவரும் உள்ளபடி உணரலாமிப்போது.

36. ஓலையேடுகள் எழுதுகிற வழக்கம் இக்காலத்தில் அனேகமாய் இல்லை என்றே சொல்லலாம். நாம் நிரூபிக்கிறபடி உண்மையில் ராமாநுஜதயாபாத்ரம் ஜனித்த காலத்தில் ஓலையேடுகள் எழுதிக்கொண்டிருந்தார்களென்பதில் ஸந்தேஹமில்லை. அக்காலத்தில் இந்த ராமாநுஜதயாபாத்ரத்தை ஒருவரும் ஓலையேட்டில் எழுதி வைத்திருக்கவில்லையென்று ஒருவரால் சொல்லமுடியுமா? முடியவே முடியாது. பலபேர்கள் அதை எழுதிவைத்துக் கொண்டிருக்கவும் கூடும்; எழுதி வைத்துக்கொள்ளாமலிருக்கவும் கூடும். அதீந்த்ரியமான இவ்விஷயத்தில் யாரும் சோதிடம் சொல்லமுடியாது. பிறருடைய ஸம்ப்ரதாயத்தில், ப்ரபந்த நிர்வாஹம் என்றும் ப்ரபந்தாநுஸந்தானதீபிகை என்றும் சில சிறு சுவடிகளைக் கல்பனை செய்திருக்கிறார்கள். [கல்பனை செய்திருக்கிறார்கள் என்று நாம் எழுதுவதைப் பார்க்கும்போதே பிறர்க்கு ப்ரளயமான உத்வேகம் உண்டாகக்கூடும். இதற்கு நாம் என் செய்வது! நாம் தெரிவிக்கிற உண்மைகளை ஒவ்வொன்றையும் பிறர் இசைந்தே தீரவேண்டும்படியான முறையிலன்றோ நாம்தெரிவிப்பது. விஷயங்களிற் கண் செலுத்துக.] அங்ஙனம் கல்பனை செய்யப்பட்ட சில சுவடிகள் ஜனித்த காலத்தில் அச்சுக்கூடங்களுக்கு அதிகப்ரசாரம் இல்லாமலிருந்தபடியால் அவை ஓலையேட்டில் ஏறியிருக்கலாம். அப்படிப்பட்ட சுவடிகளைப்பற்றியா நமக்கு விசாரம்? இதைப்பற்றின உண்மையை நாம் எப்படி நிரூபிக்கிறோமென்பதையே இப்போது விளக்குகிறோம்.

37. “ஸ்ரீமாந் வேங்கட தனியன்தான் முதலில் தேசிகனுக்கு இருந்தது” என்பதை பிறரும் நிர்விவாதமாக இசைந்திருக்கிறார்கள். அப்படியே எழுதியுமிருக்கிறார்கள். அதன் பிறகு பத்து வருஷம் கழித்து ராமாநுஜ தயாபாத்ரத் தனியன் பிறந்ததாகப் பல நூல்களில் எழுதியுள்ளார்கள். ஒரு தனியன் இருக்க, அதுதானும் அப்போதே எங்கும் பரவியுமிருக்க, வேறொரு தனியன் பத்து வருடங்களுக்கு அப்பால் எதற்காக ஸ்ருஷ்டிக்கப்பட வேணும் என்பதைப்பற்றி ஆராய்ச்சி செய்யவேண்டியது மிகவும் அவசியம். மருமம் முழுவதும் இங்கேதான் தங்கிநிற்கிறது.

38. த்ருதீயப்ரஹ்மதந்த்ர ஸ்வாமி பணித்ததாக ஒரு குருபரம்பராப்ரபாவம் வெகு நாளைக்குமுன் அச்சிட்டிருக்கிறார்கள். கலி ௵ 4973 ப்ரஜோத்பத்தி வருஷத்தில் அச்சிட்ட பிரதி எங்கும் பரவியுள்ளது. அது வெளிவந்து சுமார் 76 வருஷம் ஆகிறது. இதில் வேதாந்த தேசிகர் வைபவப்ரகரணத்தில் (பக்கம் 105ல்) ராமாநுஜ தயாபாத்ரம் பிறந்த வகைகள் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன. தேசிகன் திருவடிகளில் ஆச்ரயித்திருந்த ஒன்றான ப்ரஹ்மதந்த்ரஸ்வதந்த்ரஸ்வாமி, பகவத்விஷய க்ரந்தத்தை மாத்திரம் தேசிகனிடத்தில் அதிகரியாமல் அவருடைய திருக்குமாரரான நயினாராசார்யரிடத்தில் அதிகரிக்க விரும்பினதாகவும், அப்படி அதிகரிக்கத் தொடங்கும்போது ராமாநுஜதயாபாத்ரம் என்கிற இந்தத் தனியனை அவர் கவி பண்ணி அநுஸந்தித்து வந்ததாகவும், இதைச் சிலர் தேசிகரிடத்திலே போய்த் தெரிவித்ததாகவும், அவர் ஏற்கனவேயுள்ள ஸ்ரீமான் வேங்கட தனியனையும் இந்த தயாபாத்ரத் தனியனையும் சீர்தூக்கிப் பார்த்து, இந்த பாத்திரத்தனியனை மிகவும் கொண்டாடத்தக்கது என்று அருளிச்செய்ததாகவும், பிறகு சிஷ்யர்கள் தேசிகரை வணங்கி 'நாங்கள் எந்தத்

தனியனை அநுஸந்திக்கக்கடவோம்' என்று கேட்கையில் அப்போது தேசிகர் "ஸ்ரீமாந் வேங்கட தனியன் முன்னமே ச்ருதப்ரகாசிகாபட்டர் திருவுள்ளமுகந்து நியமித்திருக்கை யாலே அதை விடுவதற்கில்லை; இந்த நூதந பாத்திரத்தனியன் எனக்கு உகப்பாயிருக்கையாலே இதையும் விடுவதற்கில்லை; ஆகவே ஒரு வ்யவஸ்தை பண்ணிவிடுகிறேன்: ஸ்ரீ பாஷ்யம் முதலிய ஸம்ஸ்க்ருத க்ரந்தங்களை அதிகரிக்கும்போது ஸ்ரீமாந் வேங்கடதனியனை வைத்துக் கொள்ளுங் கோள்; பகவத் விஷயம் ரஹஸ்யம் முதலான த்ரமிடக்ரந்தங்களை அதிகரிக்கும்போது இந்த நூதநபாத்ரத்தனியனை வைத்துக்கொள்ளுங்கோள்" என்று விபாகம் செய்து கொடுத்ததாக வும், அதைக் கேட்டவுடனே சிஷ்யர்களும் மற்றுள்ள பெரியோர்களும் ஒக்கும் ஒக்கும் ஒக்கும் என்று உகந்தருளினதாகவும், இவ்வளவும் திருநாராயணபுரத்தில் நடந்ததாகவும்; பிறகு பத்துவருடம் கடந்தபின்பு தேசிகர் ஸ்ரீரங்கத்திற்கு எழுந்தருளினதாகவும், அங்கு விபக்ஷர் களால் த்ராவிட வேதபாராயணத்திற்கு உபரோதங்கள் பிரப்லமாக ஏற்பட்டு அத்யயநோத் ஸவம் தடைபட்டுப்போனதாகவும், அந்த உபரோதங்களையெல்லாம் தேசிகரே வாதங்கள் செய்து போக்கியருளி அத்யயநோத்ஸவத்தைக் குறையற நடப்பித்ததாகவும் அப்போது நம்பெருமாள் திருவுள்ளமுகந்து இந்த நூதநபாத்ரத்தனியனையும் இதைச் சேர்ந்த வாழித் திருநாமம் முதலியவற்றையும் பக்தர்களின் விருப்பத்தின்படி ஸந்நிதிகளிலெங்கும் கோஷிக்கு மாறு நியமித்து முந்துற முன்னம் தாம் [பெரிய பெருமாள்] அரையர் திருவாக்காலே திருச் செவிசாத்தி இவ்வண்ணமாகவே ஸகலதிவ்யதேசங்களிலும் ஸகல திருமாளிகைகளிலும் அநுஸந்திக்கும்படி கட்டளையிட்டதாகவும் அதில் எழுதப்பட்டுளது. ஸ்ரீரங்கநாதனுடைய கட்டளையென்று தெரிவிக்கப்பட்ட இவ்விஷயம் எவ்வளவு உண்மை என்பதை ஸகல திவ்ய தேசங்களின் நிலைமையே நன்கு மூதலித்துவிடுமாதலால் இந்த முழுப் பொய்யைப்பற்றி இங்கு நாம் யாதொன்றும் எழுதத்தேவையில்லை. உலக நிலைமைஎவ்வளவு புரண்டாலும் "அடியார் கள் வாழ அரங்க நகர்வாழ" என்கிற மங்களாசாஸநத்தின் மிடுக்கு *காருள்ளளவும் கடல் நீருள்ளளவும் வேதமுள்ளளவும் வேதகீதனுள்ளளவும் செழிப்புற்றேயிருக்குமென்பது திண் ணம். இது நிற்க.

39. நூதன பாத்ரம் ஜனித்ததானது தமிழ் க்ரந்தங்களுக்குத் தனியனாகவேயென்பது பிறருடைய பல நூல்களிலுள்ளது. தேசிகரே அப்படி வ்யவஸ்தை பண்ணி நியமித்தருளினர் என்றும் எழுதி வைத்திருக்கிறார்கள். தேசிக சரித்திரம் யார் யார் எழுதிவைக்கிறார்களோ அவர்கள் யாவரும் இதுவே பாடமாகத்தான் எழுதி வருகிறார்கள். அணுவளவும் பேத மில்லை; ஆகவே ராமாநுஜதயாபாத்ரத்தை அங்கீகரிப்பவர்கள் யாவரும் தேசிகநியமனமாக மேற்கூறிய தனியன் வ்யவஸ்தையை ஒப்புக்கொண்டே தீரவேணுமென்பது சிலாலிகிதம்.

40. ஆக இவ்வளவால் என்ன தீர்ந்தது என்னில்; தமிழ்ப் பாஷையிலோ மணிப்ர வாள பாஷையிலோ தேசிக க்ரந்தங்கள் காணப்படுமாகில் அவற்றில் ஒரு தனியனும் இல்லாம லிருக்குமானால் விசாரமேயில்லை. முகப்பில் தனியன் எழுதப்பட்டிருந்து அது இவர்கள் சொல்லுகிற பாத்திரத்தனியனல்லாமல் ஸ்ரீமாந் வேங்கட தனியனாகவே காணும் பக்ஷத்தில் இவர்கள் எழுதியிருக்கின்ற கதையெல்லாம் கட்டுக்கதையேயென்று நிஷ்கர்ஷிக்க வேண்டு மெனத் தீர்ந்தது. இவ்வொரு விஷயத்தையே ஒவ்வொருவரும் நன்கு ஆலோசித்து உள்ளத்தை ஒரு நிலைப்படுத்திக் கொள்ளவேணும். அந்த க்ரந்தங்களைப் பிறர் கையால் ஓலையில் எழுதும்போது எவ்வண்ணம் எழுதியிருக்கவேண்டும்? சிலர் ஒரு தனியனையும் எழு தாமல் [ஸ்ரீஸ்வஸ்தி இத்யாதிகளுங்கூட எழுதாமல்] க்ரந்தத்தையே தொடங்கி யெழுதுவதுண்டு, அப்படியும் சில ஓலை ஸ்ரீகோசங்கள் இருக்கின்றன. அவற்றைப்பற்றி நமக்கு விசாரமில்லை

யென்று முன்னமே தெரிவித்தாயிற்று. அங்ஙனன்றிக்கே, தனியன் எழுதப்பட்டு ஸ்ரீமாந் வேங்கட நாதார்ய: என்றே யிருந்து வேறொன்று அவற்றில் தலைகாட்டாதிருக்கப் பெற்ற ஓலை ஸ்ரீ கோசங்கள் நூற்றுக் கணக்கில் கிடைக்குமானால் நாம் நிச்சயிக்கவேண்டியது என்ன? என்பதுதான் இங்குக் கேள்வி. இதற்கு உரியபதிலை அவரவர்கள் நெஞ்சிலேயே சொல்வது; அல்லது அருகிலுள்ள தம் தம் நண்பர்களிடம் தெரிவிப்பது. தெரிவித்துவிட்டு மேலே பார்க்க.

41. சென்னை எழும்பூரிலுள்ள கவர்ன்மெண்டு ஓரியண்டல் லைப்ரெரியில் அபாரமான ஓலை ஸ்ரீகோசங்கள் சேமித்து வைத்திருக்கிறார்களென்பது ப்ரஸித்தம். பொய்யாகவோ மெய்யாகவோ யார் யார் எங்கெங்கு எது எது எழுதிவைத்திருக்கிறார்களோ அதெல்லாம் பெரும்பாலும் அந்த லைப்ரெரியில் சேகரிக்கப்பட்டிருக்கிறது. அங்கு யார் சென்று எந்தப் புத்தகத்தைக் கேட்டாலும், பார்க்க உடனே நிராக்ஷேபமாக எடுத்துத் தருகிறார்கள். தேசிகர் அருளிய தமிழ்ப்பிரபந்தங்கள் ரஹஸ்யக்ரந்தங்கள் ஆகிய இவை அநேகம் பிரதிகள் அங்குக் காணக்கிடைக்கின்றன. அநாயாஸமாகச் சென்று காணலாம்.

42. "H 13—14. செம்புருள்ள ஓலைப்புத்தகம் தேவை"—என்று தெரிவித்தால் உடனே தேசிகப்ரபந்த ஏட்டுப்பிரதி அழகாகக் கிடைக்கும். அதில் ஸ்ரீமாந் வேங்கட நாதார்ய: என்கிற ச்லோகம் பூர்த்தியாக எழுதப்பட்டு ப்ரபந்தாரம்பமுள்ளது காணலாம். ப்ரதாந சதகம் பரமத பங்கம் ரஹஸ்ய சிகாமணி ரஹஸ்ய நவநீதம் ரஹஸ்ய பதவி. ரஹஸ்ய மாத்ருகா ரஹஸ்ய ரத்நாவளீ ரஹஸ்ய ஸந்தேசம் ஸம்ப்ரதாய பரிசுத்தி ரஹஸ்ய த்ரயஸாரம். ஸாரஸாரம் என்றிப்படி பலபல தேசிக க்ரந்தங்கள் தனித்தனி புத்தகமாக உள்ளன. இவற்றில் ஒவ்வொன்றிலும் ஸ்ரீமாந் வேங்கட தனியன் ஒன்றேயுள்ளது. நூதன பாத்ரத்தனியன் இவற்றில் இடம் பெறாததற்குக் காரணம் பிராமாணிகர்கள் அவசியம் நிரூபிக்கவேண்டும். தேசிகனுடைய நியமனத்திற்கு மாறாக அத்தனை ஓலை ஸ்ரீகோசங்கள் எழுதி வைத்தது யார்? முன்னம் அந்த லைப்ரெரிக்குச் சென்று, இதில் நாம் தெரிவித்திருக்கிறபடியே உள்ளதா இல்லையா என்பதைக் கண்டறிந்துகொண்டு பிறகு நிரூபணத்தில் கைவைக்கலாம். தேசிகனுடைய நியமனப்படி நூதனபாத்திரத் தனியனே ஏறியுள்ள தேசிக-தமிழ் க்ரந்த-ஓலை ஸ்ரீ கோசங்களின் திரளைக் காட்டியன்றோ லைப்ரெரி ஸ்ரீ கோசங்களுக்கு அந்யதாஸித்தியைக் கூறவேண்டும். அப்படிக்கூறவல்ல ஆண்புலிகளை யன்றோ நாம் வரவேற்பது.

43. ஸ்ரீ தேசிகனுடைய வைபவப்ரகாசிகையென்று ஒரு க்ரந்தம் அச்சிட்டிருக்கிறார்களல்லவா; இதில் தானே ராமாநுஜபாத்ர விஷயமும் எழுதியிருக்கிறார்கள்; அதை மூலமாகக்கொண்டு தானே பின்புள்ளார்கள் இந்த பாத்திரவிஷயம் எழுதிவருகிறார்கள். அந்த வைபவ ப்ரகாசிகாக்ரந்தமும் மேற்குறித்த கவர்ன்மெண்டு லைப்ரெரியில் இருக்கின்றது. **R, No 104 H, 38—14"** என்று நம்பர் சொன்னால் அந்தஓலைப்புத்தகத்தை உடனேயெடுத்துக் தருவார்கள் பார்க்கலாம், தனியன் விஷயமான ப்ரஸ்தாவலேசமும் கிடையாது. இதை ஒவ்வொருவரும் அநாயாஸமாகத் தாமே கட்கூடாகக் காணலாமே.

44. இந்த ஓலைப்புத்தகத்திலும் கல்பனைக்கதைகள் சில உள்ளனவாகிலும் இந்த நூதன பாத்ரக் கல்பனைக்கதை இதில் புகவில்லை என்பதற்காகவே இதனை இங்கு எடுத்துரைத்தோம். ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொரு கல்பனை ஏறி வருகிறதென்பதுதான் நன்கு விளங்குகின்றது. இதைமேல பரக்க நிரூபிக்கிறோம். இந்த பாத்திரத் தனியன் எந்த க்ரந்தங்களுக்காக நியமிக்கப்பட்டதாய் இவர்கள் வெளியிட்டிருக்கிறார்களோ அந்த க்ரந்தங்களில் ஒன்றிலும் இது

இல்லையென்பதை நாம் கீழே நிரூபித்ததற்குமாறாக லைப்ரெரியில் இருப்பதாக ஒருவர் நிரூபிக்க முன்வந்தால் அதுவன்றோ நாம் கவனிக்கத்தக்கது. நூதன பாத்ரத்தனியனோடு கூடியதாகச் சில ஓலையேடுகளை இவர்கள் காட்டாவிடினும் காட்டினதாகவே வைத்துக்கொள்ளுவோம். அந்தத் தனியன் இல்லாமலும் ஸ்ரீமாந் வேங்கட தனியனே உள்ளதாகவும் பொது ஸ்தலங்களில் காணப்படுகிற நூற்றுக்கணக்கான ஸ்ரீகோசங்கள் எப்படி அவதரித்தன என்பதைத் தினவடக்க நிரூபித்து விட்டுப் பிறகல்லவோ வேறு பேச்சுக்கள் பேசவேண்டும். அந்த லைப்ரெரியிலேயே தென்னாசார்ய ஸம்ப்ரதாய க்ரந்தங்கள் பலபலவுள்ளன. அவற்றில் ஸ்ரீசைலேசதயா பாத்ரம் என்கிற ஆரம்பம் இல்லாத ஓலையேடுகள்மிகச் சிலவே. தனியன் புத்தகம் என்றும் வாழிதிரு நாமங்கள் என்றும் பல தொகுதிகள் லைப்ரெரிதோறும் இருக்கின்றன; அவற்றையும் கண்ணாரக் கண்டாலன்றோ தத்துவம் நெஞ்சிற்பதியும்.

## இனி, ஸ்ரீமாந் வேங்கடதனியனைத்தள்ளி நூதன பாத்திரத்தனியன் ஸ்ருஷ்டித்தது ஏன்? என்பதைப்பற்றின மருமத்தை வெளியிடுகிறோம்.

45. அருளிச்செயல் தொடங்கும்போது "விட்டுத்தொடங்குவது" என்பது பழைய ஸம்ப்ரதாயம். "பல்லாண்டு பல்லாண்டு" என்று தொடங்காமல் "பல்லாயிரத்தாண்டு" என்றே தொடங்குவார்கள்; "திங்கள் மதிநிறைந்த" "சிறுத்தாம்பினால்" "நலமுடையவன் யவனவன்" "மாது பொருந்தியமார்பன்" என்றிப்படியே தொடங்குவது நாளைக்கும் வழக்கம். தனியனையும் "ஸ்ரீசைலேச தயாபாத்ரம்" என்று தொடங்காமல் 'தயாபாத்ரம்' என்றுதான் தொடங்குவதாம். நாளைக்கும் தயாபாத்ரமென்றே தொடங்குகிற வழக்கத்தை வானமாமலை முதலானவிடங்களிற் காணலாம். எல்லாவிடங்களிலும் இப்படியேதான் தொடக்கம் நடந்துவந்தது. வேறொரு புதுத்தனியன் ஏற்பட்டுக் கலஹம் உண்டான பின்பே ஸ்ரீ சைலேச தயாபாத்ரமேன்றே தொடங்க வேண்டியதென்று வ்யவஸ்தை யேற்பட்டதாம்.

46. இங்ஙனன்றிக்கே தயாபாத்ரமென்றே தொடங்கிக் கொண்டிருந்த காலத்தில் பிரதி பக்ஷிகள் அந்த கோஷ்டியிலே வந்து புகுர ஆரம்பித்தவர்களாதலால் தாங்கள் வேறு வாக்கியமாகத் தொடங்கினால் "ப்ரதமகபளே மக்ஷிகாபாத:" என்னுமாபோலே ஆரம்பத்திலேயே தடை ஏற்பட்டுவிடும் என்று அஞ்சி ஆரம்பவாக்யம் ஒன்றாகவே யிருக்கவேண்டுதற்காகத் தாங்களும் தயாபாத்ரம் என்றே ஆரம்பிப்பதாய்க் காட்டிக்கொள்ள ராமாநுஜதயா பாத்ரத்தைக் கல்பனை செய்து கொண்டார்கள். வ்யவஹாரங்களில் விசாரணை ஏற்பட்டபோதும் "தயாபாத்ரமென்றுதான் இருவகுப்பினரும் சேர்ந்துதொடங்குவது வழக்கம்; தொடங்கியான பிறகு அவரவர்களுடைய ஆசார்ய விஷயமான தனியனை அவரவர்கள் ஸேவிப்பது வழக்கம்." என்று, வக்தேறிகள் சொல்லிக்கொள்ளவும் ஒரு ஸௌகரியமேற்பட்டது. ஸ்ரீமாந் வேங்கட என்று தொடங்கினால் அதிகமாக வேற்றுமை ஸ்பஷ்டமாக விளங்குவதால் சிரமம் ஏற்படுமென்று தயாபாத்ரமென்றே வைத்துக் கல்பனை செய்தார்கள். ஸ்ரீசப்தத்தை முன்னேவைத்தே ச்லோகம் தொடுக்கவேணுமென்று வெகு சிரமப்பட்டும் அது கூடவில்லை. ஏன்? தயாபாத்ரம் என்கிற ஆநுபூர்வி அப்போது வரமாட்டேனென்கிறதே.

## ராமாநுஜ பாத்ரத்தைப்பற்றி யெழுதியுள்ள கதைகள் சிறிதும் பொருந்தாதவை யென்பதை ஸாரயமாக நிரூபிக்கிறோம்.

47. ஆரியர்காள்! “இரண்டு தனியன்களில் எதை நாங்கள் வைத்துக்கொள்வது?” என்று அக்காலத்திலேயே சிஷ்யர்கள் தேசிகரைக் கேட்டதாகவும் அதற்கு தேசிகர் ஏதோ வ்யவஸ்தைபண்ணித் தந்ததாகவும் எழுதினார்களே! அந்த ஒழுங்காக எழுதிவைக்க அந்தோ! அறிந்திலர். *“ஸ்ரீமாந் வேங்கடதனியனை உபய வேதாந்த ரஹஸ்ய க்ரந்த காலக்ஷேபங்களுக்கு வைத்துக்கொள்ளுங்கோள்; *பாத்திரத்தனியனை ஸந்நிதிகளில் விவாதங்களுக்கு வைத்துக்கொள்ளுங்கோள்” என்று தேசிகர் நியமித்தருளினதாக எழுதி வைத்திருந்தால் எவ்வளவோ அழகாயிருந்திருக்குமே. அப்போது நாம் ஓலை ஸ்ரீகோச ஆராய்ச்சியை ப்ரஸ்தாவிக்கவே இடமிராதே. “தேசிகர் அங்ஙனம் நியமித்தார் என்பதை ஓலையேடுகளில் காட்ட முடியுமா?” என்கிற ஒரு கேள்வியோடே நின்றிருக்குமே. அதற்கு ஒன்றிரண்டு ஏடுகளை இரண்டொரு நாளில் ஸஜ்ஜப்படுத்திப் புராதனமாக்கிக் காட்டியும் விடலாமே. இல்லாத வொருதனியனுக்கு, இல்லாத கதைகளைக் கட்டினதானது பொய்யை ஊர்ஜிதப்படுத்தியதே தவிர வேறொரு பலனையும் பெறுவிக்கவில்லையே.

48. விவேகிகாள்! ப்ரஹ்மதந்த்ர ஸ்வதந்த்ரஸ்வாமி தாம் பகவத் விஷயமதிகரித்தபோது நூதன பாத்ரத்தனியனைத் தாம் ஸ்ருஷ்டித்துத் தாம் அநுஸந்தித்ததாக இவர்கள் எழுதியிருப்பதே கட்டுக்கதையென்று சிலாலிகிதமாயிருக்கிறது. அது எப்படியாவது இருக்கட்டும். ‘எந்தத்தனியனை அநுஸந்திப்பது?’ என்று தேசிகரிடம் சென்று சிஷ்யர்கள் கேட்க வேண்டியகாரணம் என்னே? இங்ஙனம் கேட்டார்கள் என்கிற வார்த்தையே அசடுதட்டிக் கிடக்கவில்லையா? இரண்டு ச்லோகங்களையும் சேர்த்தே அவர்கள் அநுஸந்தித்துக்கொண்டால் என்ன முழுகிப்போய்விடும்? ஸ்ரீராமாயணாதிகளில் வால்மீகி ப்ரப்ருதிகளைப்பற்றிப் பல பல துதிகள் அநுஸந்தித்து வரவில்லையோ? திருக்கச்சிநம்பிகளின் தேவராஜாஷ்டகத்திற்கு முன்னே இரண்டு ஸ்துதிபத்யங்கள் அநுஸந்தித்து வரவில்லையோ? ஸ்தோத்ரரத்நத்திற்கு முன்னே *ஸ்வாதயந்நிஹ *நமோ நமோ யாமுநாய *நமோ யாமுந *எனமூன்று அநுஸந்தித்து வரவில்லையோ? *அவிதிதவிஷயாந்தர: *வேறொன்றும் நானறியேன் *இத்யாதிகளும் பலவுண்டே. இப்படியிருக்க, எந்த ச்லோகத்தை யநுஸந்திப்பது? என்கிற கேள்வியே அஸங்கதமாக இல்லையா? “எந்தத்தனியனை ப்ரதானமாக வைத்துக்கொள்வது?” என்று கேட்டார்கள்—என்று விடைகூறப் பார்க்கில். அப்போது தேசிகருடைய உத்தரம் அஸங்கதமாகுமே. முழுவதும் அவிசாரிதரமணீயமே. அதற்குமேல், பாத்ரத்தனியனை தேசிக மிகவும் கொண்டாடினார் என்பது ஹாஸ்யமாக இல்லையா? அவர்தாமே ஒரு நிபந்தனை பண்ணித்தந்தாரென்கை பரமஹாஸ்யமாக-இல்லையா? அந்த நிபந்தனையின்படி ஒருவர்கூட நடத்தி வரவில்லையென்பது அவரவர்கள் வெளியிட்டிருக்கின்ற தனியன் புஸ்தகங்களாலும் லைப்ரெரிகளிலுள்ள ஓலைப்புத்தகங்களாலும் கல்வெட்டாகத் தேறிநின்றதே! இது சோசநீயமாக இல்லையா? உதாஹ்ருதபூர்வமான வேதாந்த தேசிகவைபவப்ரகாசிகையில இந்த பாத்ரத் தனியனுடைய பேச்சே இல்லாமலிருப்பது எவ்வளவோ உண்மையைக் காட்டிவிடுகிறதே. ப்ரஹ்மதந்த்ரஸ்வாமி நயனாசார்யரோடு கூடவே தேசிகனிடத்திலேயே பகவத் விஷயமதிகரித்தாரென்கிறவுண்மை அதில் வெளிவந்து விட்டபடியால் இவர்களுடைய கல்பனை முழுதும் ஆகாசப்பந்தலாக முடிந்துவிட்டதன்றோ. ஒரு பொய்யிலிருந்து எத்தனை அநர்த்தங்கள் விளைகின்றன பாருங்கள்.

49. அன்றியும், தேசிகர் கொண்டாடும்படியான விசேஷம் இந்த நூதனபாத்திரத்தில் என்ன இருக்கிறது என்பதை மேதாவிகள் சிறிது விமர்சிக்கலாகாதா? ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய: என்கிற பரமகம்பீரமான பத்யரத்நத்தைக் கேட்ட காதுகளுக்கு இந்த பாத்ரச்லோகம் எப்படியிருக்கிறது என்பதை அவரவர்தம்முள்ளம் உணரமாட்டாதா? விலக்ஷணமான அந்தத்தனியனில் ப்ரஹ்மதந்திரஸ்வாமி அத்ருப்தியடைந்து வேறு தனியன்பணிக்க நினைத்தார் என்கிற வார்த்தையே அருவருக்கத்தக்கதாக இல்லையா? அவர் அங்ஙனம் பணிக்க நினைத்தது பரமார்த்தமாக இருந்தால் ஸ்ரீமாந் வேங்கடதனியனைப் பலபடியாலும் வென்றதாகவன்றோ புதுத்தனியன் பிறந்திருக்கும். தேசிகன் ஸ்வாசார்யரான அப்புள்ளாருக்கு அருளிச்செய்துள்ள * யஸ்மாதஸ்மாபிரேதத் யதிபதிகதித ப்ராக்தந ப்ரக்ரியோத்யத்* என்கிறச்லோகத்திற்குத் தோள் தீண்டியாகவன்றோ தோன்றியிருக்கவேணும். அப்படியில்லாமற்போனாலும் * ஸ்ரீமத் ராமாநுஜகுரு க்ருபா பாத்ர மாச்சர்ய சீலம் * என்றிப்புடைகளிலே சொல்நிரம்பவும் பொருள் ததும்பவும் பணித்தாலன்றோ ஸ்ரீமாந் வேங்கடதனியனில் விஞ்சியதாக ஆகும். அதுவன்றோ தேசிகரும் உண்மையில் உகக்கும்படியானதாகும்.

50. தேசிகனுக்குண்டான ஆசார்ய கடாக்ஷப் பெருமையை ஸ்ரீமாந்வேங்கடதனியன் சிறிதும் காட்டவில்லையென்றும் அந்தப் பெருமையைப் பேசுவதற்கென்றே நூதன தனியன் பிறந்ததென்றும் கூசாமல் எழுதிவைத்திருப்பது பொருந்தவேண்டுமானல், தேசிகர் அதிகரண ஸாராவளியில் தம்மைப்பற்றி ஸாதித்துக்கொண்ட * ஸ்ரீமத்ப்யாம் ஸ்யாதஸாவித்யநுபதி வரதாசார்ய ராமாநுஜாப்யாம் ஸம்யக் த்ருஷ்டே * என்கிற ச்லோகத்தின் சாயையிலன்றோ அமைந்திருக்கவேண்டும். குறை தீர்க்கவந்த தனியன் அநுஷ்டுப்பாகவா பிறந்திருக்கும்? பல குறைகளுக்கு ஹேதுவுமாயிற்றே!

51. அன்றியும், பகவத்விஷய காலக்ஷேபத்திற்காகவே இந்த பாத்ரத்தனியன் இடப்பட்டது என்கிறீர்களே; அப்படியானல், பகவத் விஷயத்தில் தேசிகருக்குள்ள அவகாஹநத்தையும் ஆற்றலையும் சிறிதாவது காட்டியல்லவோ இத்தனியன் பிறந்திருக்கவேணும். * இமலந்தந் தொடங்கி இருங்கடலளவும் பெருமேன்மை பெற்றுப்பொலிந்து வருகின்ற ஸ்ரீசைலேச தனியனுக்குப் போலியாயிருக்க வேணுமென்கிற எண்ணமே கொண்டு அதன் சாயலாகவே தொடுத்திருக்கின்ற படியைப் பார்க்கலாகாதா?

## ஸ்ரீசைலேச பாத்திரத்திற்குப் பிரதியாகவே ராமாநுஜாபாத்ரம் கல்பிக்கப் பட்டதென்பதைப் பரக்கநிரூபிக்கிறோம்.

52. "இதைப்பார்த்தே அது தொடுத்ததாகக் கொள்ளலாகாதோ?" என்று ஸஹஸா பிறர் பேசவுங்கூடும். அந்தோ! கேண்மின்? தேசிகருக்கு வேறொரு தனியன் இல்லாமலிருந்து இந்த பாத்திரத்தனியனென்றே யிருக்குமாகில், இதுதானும் திவ்யதேசங்களிலும் க்ரந்தகாலக்ஷேபாதி பரம்பரையிலும் வீறு பெற்று யிருக்குமாகில் இதைப்பார்த்தே ஸ்ரீசைலேச தனியன் தொடுத்தது என்று நாமே ஸித்தாந்தம் செய்யத் தடையிராது கிடீர். கீர்த்திமூர்த்தியான பெங்களூர். (வடகலை) தூப்புல் வேங்கடாசாரியரென்பவர் ஸகல ஸ்தோத்ரங்களையும் ஒன்று சேர்த்துப் பதிப்பித்தபோது ஸ்ரீதேசிக ஸ்தோத்ரங்களின் தலையில் ஸ்ரீமாந் வேங்கடதனியனைப் பதிப்பித்து; ஸ்ரீவரவரமுநிதச்சிஷ்ய ஸ்தோத்ரங்களின் தலைமேல்* ஸ்ரீமாந் ஸ்ரீரங்கநாதார்ய: வேதாந்தத்வய கேஸரீ, முநி: காந்தோபயந்தா மே ஸந்நிதத்தாம் ஸதா ஹ்ருதி. * என்றொரு ச்லோகத்தைப் பதிப்பித்தார். அதைக்கண்டு மற்றுஞ்சிலரும் அங்ஙனே பதிப்பித்

தார்கள். இந்த ச்லோகத்தைச் சிலர் சிந்தனை செய்யவும் தொடங்கினார்கள். இது போலித் தனியன் என்பதை நிரூபித்து நாமே இதன் பிரசாரத்தை நிரோதித்திருக்கிறோம். எந்த விஷயத்திலும் நிஷ்பக்ஷபாதமாகவே நாம் ப்ராமாணிகார்த்த ப்ரதிஷ்டாபநம் செய்வோம்.

53. எஞ்ஞான்று மெங்குமொழிவற நீங்காத செல்வம் நிறைந்து விளங்கா நின்ற ஸ்ரீசைலேசத் தனியனை போலித்தனியனுக்கப் பாடு படுவதெல்லாம் அதற்குள்ள பெருமையை ப்ரதிஷ்டாபநம் செய்வதிலேயே பர்யவஸித்து நிற்கும். வேதத்தில் ஓரோவிடங்களில் தேவர்களின்பராஜயகதை வரும்போது வைதிகர்கள் குரல்தழுத்துத் தலைகுனிய நிற்க நேருமாபோலே சிலதிவ்யதேசங்களில்சிலநாளாகநேர்ந்திருக்கும்நெறிதவறான நிலைமை இன்புறுமிவ் விளையாட்டுடையானுடைய லீலைகளிலே ஒன்று என்றே கருதத்தக்கது. அந்தச்சில ஆலயங்களில் நூதன பாத்ரத் தனியன் வந்தேறின நாளை ஒரு நொடிப்பொழுதில் கண்டு பிடிக்கக் குறையில்லையன்றோ? எவ்வுள்கிடந்தான் ஸந்நிதியில் ஸ்ரீமத் அஹோபிலம் ஸ்வாமிகள் ஸ்ரீசைலேசத் தனியனைத்தொடங்கி வந்த முறைமையை மாறுபடுத்த ஆரம்பித்ததும் அதற்காக அவர்க்கு நேர்ந்த கஷ்டங்களுமெல்லாம் நாளைக்கும் ரிகார்ட்டுகளில் அழிந்திலவே. அவற்றில் சில ரிகார்டுகள் அச்சிட்டு வெளியிடப்பட்டேயுள்ளன.

54. எதற்குப் போட்டியாக எது கல்பிதம் என்பதை இன்னமும் எளிதாகவும் அவிசால்யமாகவும் நன்கு நிலை நாட்டிவிடுகிறேன். இந்த பாத்ரத்தனியனோடு கூட [உத்தர சாக்தி யென்கிற வாழித் திருநாம ப்ரகரணத்தில்] தேசிகருடைய ஆசார்யரான அப்புள்ளார்க்கும் ஒரு தனியன் ஏற்பட்டிருக்கிறது. [அதாவது நமோ ராமாநுஜார்யாய என்பது.] மணவாள மாமுனிகளின் ஆசார்யரான திருவாய் மொழிப்பிள்ளைக்குத் தனியனாக அநுஸந்திக்கப்பட்டு வருகின்ற நம: ஸ்ரீசைலநாதாய என்கிற ச்லோகத்திற்குப் பிரதியாகத் தோன்றினது இது. அந்த ச்லோகம் கைங்கர்ய சாலிநே என்று முடிவாகிறது. இந்த ச்லோகம் குணசாலிநே என்று முடிவாகிறது. நம: என்றதைப் பார்த்து நம: என்பது; வந்தே என்பதைப் பார்த்து வந்தே என்பது; இப்படியாகவே ஒரு ஸ்ருஷ்டி ஏற்பட்டிருக்கிறது. பிராமாணிகர்காள்! இங்கு ஆராய்ச்சி செய்மின். அப்புள்ளார்க்கு இந்தத்தனியன் உண்மைதானா? அவருக்கு தேசிகனருளிச்செய்த தனியன் யஸ்மாதஸ்மாபி: இத்யாதியாய் ஆச்சர்யமான பெரிய ச்லோகமன்றோ உண்மையானது. எந்த க்ரந்த பரம்பரையிலும் அதுதான் அநுஸந்திக்கப்பட்டு வருகிறதென்பது நிர்விவாதம். அப்படிப்பட்ட அற்புதமான தனியனை விட்டு வேறான இந்த அநுஷ்டுப்பை தேசிகரே ஸாதித்தார் என்கிறார்களே; எதற்காக அவர் இதை ஸாதிக்க வேணும்? "நம: ஸ்ரீசைலநாதாய என்பதைப்போலவே அநுஷ்டுப்பாகவே நம் ஆசார்யருக்கும் இருக்கவேணும்" என்று கருதியா ஸாதித்தார்? ஸ்ரீமாந் வேங்கட தனியனிலுண்டான குறையைத்தீர்ப்பதற்காகப் பாத்ரத்தனியன் பிறந்தது என்றாப்போலே, யஸ்மாதஸ்மாபி: என்று தாமே முன்பு ஸாதித்த தனியனிலுண்டான குறையைத் தீர்ப்பதற்காகத் தாமே இந்த அநுஷ்டுப்பு ஸாதித்தார் என்று சொல்லித்தீர வேண்டுமே? அது என்ன குறை?

55. "உலகுக்கெல்லாம் ஆசார்யரான நம்முடைய தனியன்களே அநுஷ்டுப்பாயிருக்கும்போது வெறுமனே சாஸ்த்ரார்த்தமாக நமக்கு வாய்த்த குருவுக்கு ப்ரஹ்மாண்டமான தனியன் ச்லோகம் எதுக்கு" என்று தேசிகரே திருவுள்ளம்பற்றி முந்தின பெரிய தனியனை மறுத்து இந்தச் சிறிய தனியனைப்பருளினார்—என்று சொல்லி வருகிறார்களே, அதையே எல்லீரும் ஆமோதிக்கிறீர்களா? அப்படியானால் அந்தப் பெரிய தனியன் தள்ளுண்டிருக்க வேணுமே; அங்ஙனில்லையே. போட்டிச்சண்டையாக கோஷிப்பதற்கு மாத்திரமேயன்றோ

அநுஷ்டுப்பை ஆதரித்து வருகிறீர்கள். இது அடியோடு எந்த ஏட்டிலும் உறவுமில்லையே. திருவாய் மொழிப்பிள்ளைக்கு நம:ஸ்ரீசைலநாதாய என்பது தவிர வேறுதனியன் எங்கும் இல்லாமலிருப்பதையும் சேர்த்து இவ்விஷயங்களை ஆராய்ந்து பார்க்கலாகாதா.

56. அடுத்தபடியாக மற்றொரு விநோதமும் கேண்மின்; வடமொழித் தனியன்களின் செய்தி இதுவாயிற்று. இனித் தென்மொழிவாழித் திருநாமங்களில் புகுந்து பார்ப்போம்.

A. வாழி திருவாய்மொழிப்பிள்ளை மாதகவால்வாழும்

B. வாழியிராமாநுசப்பிள்ளான் மாதகவால்வாழும்

(இவை உபய வெண்பாக்களின் ஆரம்பம்.)

A. தேறும்படியுரைக்கும் சீர், B. தேறும்படியுரைக்கும் சீர்.

(அந்த வெண்பாக்களுக்கு இருவருடையமுடிவும் இதுவே.)

பிறகு கல்பிதம் எது? என்பதைக் கண்டுபிடிக்கும் வழி கேண்மின்.

"தேறும்படி மாறன் மறைப்பொருளை மணவாள மாமுனிவன் உரைக்கும் சீர்வாழி" என்கின்றது முந்தின வெண்பா. "தேறும்படி மாறன் மறையும் இராமாநுசன் பாஷ்யமும் நிகமாந்த குரு உரைக்கும் சீர்வாழி" என்கிறது பிந்தின வெண்பா. தேறும்படி என்கிற வாசகம் இரண்டிலுமுள்ளது. அதற்கு என்ன பொருள் தெரியுமா? 'கடைத்தேறும்படி' என்று பொருள். யார் கடைத் தேறும்படி? என்று ஆகாங்க்ஷையுண்டாகியே தீரும். எழுவாய் அவசியம் வேண்டும். முந்தின வெண்பாவில் "மாநிலத்தோர் தேறும்படி" என்றுள்ளது பிந்தின வெண்பாவில் எது எழுவா யென்று வினவினால் எழுவதற்கு வாயில்லையே.

57. "எழுவாய் இல்லாவிட்டாலென்ன? அர்த்தாத் ஸித்திக்கமாட்டாதோ? இதுவொரு விஷயமா?" என்று பிறர் இலேசாகச் சொல்லிவிடக்கூடும். மத்யஸ்தரான தமிழ்ப் புலவரிடத்திலே இரண்டு வெண்பாவையும் தந்து, "எந்த வாக்கு ஸ்வரஸமாக அவதரித்தது? எந்த வாக்கு பிரதியாகத் தோன்றினது? சொல்லவேணும்" என்று கேட்டால் அப்போதன்றோ இந்த நமது நிரூபணத்தின் சுவை புலனாகும். சூதுகளை மர்மத்தில் கண்டு பிடிக்க வல்ல ஆராய்ச்சியாளர் உலகில் இல்லாமற் போகவில்லை. இரண்டு வெண்பாக்களிலும் இலக்கணப்படி சீர்பிரித்துப் பாருங்கள்; முந்தினதில் [வாழி—திருவாய்—மொழிப்பிள்ளை—மாதக வால், வாழும்—மணவாள—மாமுனிவன்] என்று அழகாகச் சீர்பிரிகிறது. பிந்தினதில், [வாழி—யிராமா—னுசப்பிள்ளான்,....வாழு—மணிநிக—மாந்தகுரு] என்று சீர்பிரிகிறது. 'எப்படிப் பிரிந்தாலென்ன? இதுவொரு குற்றமோ? என்பீர்கள். னுசப்பிள்ளான் என்றும், மாந்தகுரு என்றும் உடையும்படி வெண்பாவாகவே வைத்துப் பாடவேண்டிய அவசியம் யாது கொல்? வேறு விருத்தத்தில் செவிக்கினிதாகப் பாடியிருக்கலாகாதோ? முந்தினது [மாமுனிகளின் விஷயமானவது] வெண்பாவாகவே யிருந்தபடியால் அந்த ஸ்தானத்தின் வேறு விருத்தம் இயற்ற இயலவில்லை என்றுதானே உண்மையான பதில் வரவேண்டும். நிற்க.

58. முடிவில் அநுஸந்திக்கப்படுகிற அடியார்கள் வாழ அரங்கநகர்வாழ என்கிற வெண்பாவுக்குப் பிரதியாக இவர்கள் சொல்லுகிற நானிலமுந்தான் வாழ என்கிற வெண்பாவிலும் ஆராய்ச்சிக்கு விஷயம் வேண்டியதுள்ளது. இவை ஸ்ரீரங்கத்தில் அவதரித்தனவென்றே இருவகுப்பினரும் எழுதிவைத்துள்ளார்கள். இதற்குப் பொருந்தவும், ஸ்ரீமந்! ஸ்ரீரங்கச்ரியமநுபத்ரவாமநுதிநம் ஸம்வர்த்தய * என்ற வடமொழி வாழ்த்துக்குப் பொருந்தவும் ஸ்ரீரங்க ஸாம்ராஜ்

யத்திற்கு வாழ்த்துப் பாட வேண்டியது ப்ராப்தம். அப்படியே அரங்கநகர்வாழ என்று முந்தின வெண்பாவிலுள்ளது. பிந்தின வெண்பாவில் ஒரு ஊரைப்பற்றியும் பேசாமலே யிருந்து விட்டால் கேள்வியில்லை. அரங்கநகர்வாழ என்றதைப் பார்த்து நாமும் ஒரு நகர்பதம் இட்டுவைப்போமென்றெண்ணியல்லவோ (பிந்தின வெண்பாவில்) மாநகரில் என்று இட்டு வைத்தார்கள். இதற்கு என்ன அர்த்தம். அநர்த்தமே அர்த்தம் போலும். மாநகர் என்று ஓர் ஊரில்லை. ஆனால் ஸம்ப்ரதாயத்தில் தென் திருப்பேரைக்கு மாநகர் என்று பிரஸித்தியுண்டு. "தென் திருப்பேரெயில் மாநகரே" என்கிற திருவாய்மொழியும் "மாநகரிலே கோஷிக்கும்" என்கிற ஆசார்யஹ்ருதய திவ்ய ஸூக்தியும் முதலியன இதில் பிரமாணம். அந்தத் திருப்பதியை உட்கொண்டா இந்த வெண்பா பிறந்தது? விவேகிகாள்! நீங்களே பொருள்பணிமின். 'அரங்கநகர்வாழ' என்று ஏற்கெனவே பாசுரம் அவதரித்திருந்தபடியால் அவ்விதமாகவே தாங்களும் பாசுரம் கூட்டக் கூசி எதுகை நோக்கி ஏதோவொன்று பேசிவைத்தார்கள்—என்பதுதான் தத்துவமாகத் தேறும்.

59. மாமுனிகளின் வாழியின் தொடக்கத்தில் "மாறன் திருவாய் மொழிப் பொருளை" என்று [பிரகரணாநுகுணமாக] திருவாய்மொழியை மாத்திரம் எடுத்ததற்குச் சேர, முடிவு வெண்பாவிலும் *சடகோபன் தண்டமிழ்நூல் வாழ* என்று திருவாய் மொழிக்கு மாத்திரமே வாழி கூறியிருப்பது மிக்க பொருத்தம். பிரதியான வாழியின் தொடக்கத்தில் "மாறன் மறையுமிராமாநுசன் பாஷ்யமும்" என்று ஸ்ரீபாஷ்யத்தையும் சேர்த்து எடுத்ததற்கு இணங்க முடிவு வெண்பாவிலும் "மாநகரில் மாறன் மறையும் பாஷ்யமும் வாழ" என்றிருக்கவேண்டுமே. இல்லையே. "இப்படி என்ன நிர்ப்பந்தம்?" என்கிற க்ஷேபோக்தியினால் வெற்றி பெறலாமென்கிற எண்ணம் மாத்திரம் வேண்டா. வெண்பா அவ்வளவுக்கு இடம் தரவில்லை என்னுங்கோள். வெண்பாவாகவேயிருக்க வேணுமென்று என்ன அவசியம்? மாமுனிகளுக்காக அவதரித்தது வெண்பாவாக இருக்கிறபடியால் [அந்த கோஷ்டியில் கலந்து வேற்றுமை காட்டாமல் உபாம்சுவாய் ஸேவிப்பதற்குப் பாங்காக] எங்களுக்கும் வெண்பாவே அமைய வேண்டியதாயிற்று—என்று சொல்லித்தீரவேண்டியது தவிர வேறென்ன வுத்தரமுள்ளது.

60. அநுஷ்டுப்புகளின் ஸ்தானத்திலே அநுஷ்டுப்புகளும், தயாபாத்ரம்—வந்தே—நம:—சாலிநே என்கிற பதவிந்யாஸங்கள் மாறுதல். அப்படியப்படியே அவைகளும், வெண்பாக்களுக்கு வெண்பாக்களும், ஆசிரியத்திற்கு ஆசிரியமும், தேறும்படியுரைக்குஞ் சீருக்கு தேறும்படியுரைக்குஞ்சீரும் ஆகவிப்படி மாறும்படி யுரைக்குஞ்சீர் சிறிதுமின்றித் தொடுக்கப் பட்டிருக்கிற போக்கையும், திவ்ய தேசங்களின் திவ்ய சரித்திரங்களையும், ஓலை ஸ்ரீகோசங்களின் ஒழுங்குகளையும், நம்முடைய பல நன்னிரூபணங்களையும், ஒன்று சேர்த்து விவேகிக்க இவ்வுலகில் அதிகாரிகளில்லையா? 600 வருஷமென்று வாய்திறக்க இன்னமுமா கூசாதிருக் கின்றீர்கள்? நன்று நன்று. 600 வருஷம் ஆனது மெய்யே யென்பதை உலகமுகந்து கொள்ளுமாறு, வசைமொழிகள் சிறிதுமின்றி ப்ராமாணிகமாக ஒவ்வொன்றுக்கும் உத்தர முரைத்து, நாம் மறுவாய்திறக்க வழியில்லாமே க்ரந்தமுகேந ஸ்தாபனம் செய்பவல்லாரில்லையே.

61. ஸ்ரீசைலேசதயா பாத்ரத்தைப் பார்த்து 'பாத்ரமென்கிற பதத்தோடுகூடியே திவ்ய ப்ரபந்தாரம்பத்தனியன் இருக்க வேண்டும் போலும்' என்று க்ரஹித்து எத்தனை பாத்ரத் தனியன்களைக் கல்பித்திருக்கிறார்கள் தெரியுமோ? அஹோபிலமடத்து ஸ்ரீஆதிவண்சடகோப ஸ்வாமி தனியன் இன்னதென்பது உலகப்ரஸித்தம். அதாவது ப்ரபத்யே நிரவத்யாநாம் என்கிற

ச்லோகமே. இந்தத்தனியனையே ஸமாச்ரயண பரம்பரைகளிலும் க்ரந்த பரம்பரைகளிலும் நாலைக்கும் மடத்தார் ஸேவித்து வருகிறார்கள். தனியன் புஸ்தகங்களிலும் இதைத்தான் வெளியிட்டுள்ளார்கள். இவர்கள் ராமாநுஜ தயாபாத்ரத் தனியனை இழுத்துப்போட்டுக் கொள்ள ஆரம்பித்தபோது * கேசவார்யக்ருபா பாத்ரம் * என்று, தங்கள் ஸ்வாமியின் தனியனாக இன்னொரு பாத்ரத்தனியனையும் இயற்றிக்கொண்டார்கள். இவ்விரண்டு பாத்ரங்களில் எந்த பாத்ரத்தை முன்னே சொல்லுகிறது என்று சச்சரவு உண்டாகி, நாலைக்கும் சச்சரவிலேயே இருந்து வருகிறது.

62. மடத்து க்ரமங்களில் முதலில் ஸ்ரீசைலேச தயாபாத்ரமே தொடங்கிவந்ததையும் பிறகு அதை அடியோடு தள்ளி புதியபாத்திரம் சேர்த்துக்கொண்டு அதையும் தள்ளினதையும், பிறகு [ஸியூத்த்யர்களோடு ஸந்தி பண்ணிக்கொள்ள வேண்டி] அதை மடத்துஸ்வாமியின் கேசவார்யக்ருபா பாத்திரத்திற்குப் பின்னாலே சேர்த்துக் கொண்டதையும், இன்னமும் ஒரு நியதியின்றிக்கேயிருந்து வருவதையும் ஆராய்க. அச்சுப் புத்தகங்களை யெல்லாம் ஒன்று சேர்த்து ஊன்றி நோக்கினால் வெகு விஷயங்கள் விசதமாகும். ராமாநுஜதயா பாத்ராதிகள் அடியோடு நுழையப்பெறாத புத்தகங்களையும், அவற்றை முன்னேயிட்டுப் பின்னால் மடத்துத்தனியன்கள் இட்ட புத்தகங்களையும், கேசவார்யக்ருபா பாத்ரத்தை முன்னே போட்டுப் பின்னை ராமாநுஜபாத்ரம் போட்ட புத்தகங்களையும் (இனிவரப்போகிற விலக்ஷணப்ரகார புத்தகங்களையும் கண்ணாரக் கண்டு இப்படிப்பட்ட வித்யாஸங்கள் ஏற்படக் காரணம் யாது ? என்று விமர்சித்தால், திருவெவ்வுளூர் தேவஸ்தான ரிகார்டுகளையும் சேர்த்துப் பராமர்சித்தால் நல்ல தெளிவு உண்டாகியே தீரும்.

63. * லக்ஷ்மீநாத ஸமாரம்பமாய் நாதயாமுநமத்யமமாய் ஸ்ரீராமாநுஜ பர்யந்தமான குருபரம்பரைக்கு இவர்கள் தோன்று தொட்டு அநுஸந்தித்து வருகிற [ஸ்ரீஸ்தநாபரணம்........(இத்யாதி) யோநித்யமச்யுத * ] தனியன்களையும் மாற்றிக்கொள்ள நிச்சயித்தவர்கள் என்பது ஸத்ஸம்ப்ரதாய முக்தாவளி யென்கிற ஸ்ரீஸந்நிதி குரு பரம்பரையின் திருத்தமான பதிப்பினால் தெளிவாகிறது. "அந்தத்தனியன்களை யெல்லாம் நாங்கள் மாற்றிக்கொண்டு வெகுகாலமாயிற்றே" என்று ஸாதிக்கிற மஹான்களும் பலருளர். இந்த விஷயவிரிவினுட் புகுந்தால் பெரிய பாரதமாகும்.

64. மடத்துஸ்வாமிக்கு க்ரமமாக ஏற்பட்டிருக்கிற தனியன்வேறு; இவர்கள் புதிதாகச் சொல்லிவருகிற பாத்ரத்தனியன் வேறு—என்பதை மாத்திரம் மத்யஸ்தர்கள் திண்ணிதாக நெஞ்சிற்கொள்ளக் குறையில்லையே. இதில் வாய்திறக்கவும் வழியில்லையே. ஸந்நிதிகளில் இயல் தொடங்கும்போது ராமாநுஜாபாத்ரமே முந்துறச் சொல்லித் தொடங்கவேணுமென்று பகவதாஜ்ஞையும் ஆசார்ய நியமனமும் ஆனதாக ஒருசாரார் எழுதியிருப்பது உண்மையாகில், இப்போது ராமாநுஜாபாத்ராபிமானிகளாகக் காண்கிற மடத்தாரும் அந்தக் கட்டளையைப் பரிபாலித்து வரவேண்டாவா ? ராமாநுஜாபாத்ரம் சொல்லியான பிறகல்லவோ கேசவார்யக்ருபா பாத்ரம் பேசவேணும். அப்படி எங்கேனும் காண்பதுண்டோ ? அதை இவர்கள் பின்னால் தள்ளியிருப்பது கொண்டே அது பின்னால் வந்தேறினதென்பது குன்றிலிட்ட விளக்காக விளங்கவில்லையா ?

65. இவையெல்லாவற்றிற்கும் சிகரமாக ஒருவிஷயம் காண்மினோ. இப்போது ராமாநுஜதயாபாத்ரத்தைப்பற்றியிருப்பவர்கள் உடையவர்க்கும் நம்மாழ்வாருக்கும் ஸகலபரம்

பரைகளிலும் அநுஸந்தித்து வருகிற தனியன்கள் எவை? என்று பாருங்கள். இவர்களுக்கு யோநித்யமச்யுத என்பதும் கிடையாது; மாதாபிதாயுவதய: என்பதும் கிடையாது. உண்டென்று பொய் சொல்வதற்கும் வரமாட்டார்கள். ப்ரணமம் லக்ஷ்மணமுநி: என்பதையே உடையவர் தனியனாகவும், யஸ்ய ஸாரஸ்வத ஸ்ரோத: என்பதையே நம்மாழ்வார் தனியனாகவும் நியமேந ஓதியும் ஓதுவித்தும் வருகிறார்கள். அப்படிப்பட்டவிவர்களுக்கு, அந்தத் தனியன்களைத் தள்ளி அவற்றின் ஸ்தானத்திலே—தென்கலையார்களே நியமேந அநுஸந்தித்து வருகிற * யோநித்யம் * மாதாபிதா * தனியன்கள் விவாதவேளைகளில் மாத்திரம் எப்படி வந்து புகுந்தன? யார் நியமித்து இவற்றைப்பற்றினார்களிவர்கள். வஸ்துதஸ்து, இத்தனியன்களில் தங்களுக்கு விரோதம் தோன்றுமையாலே இவற்றை மாற்றிக்கொள்ள நினைத்திலர் என்றும், விரோதமுள்ள தனியன்களிலே விச்வாமித்ர ஸ்ருஷ்டிகளை யதேஷ்டமாகப் பண்ணிக்கொண்டார்களென்றும் சொல்லித்தீரவேண்டியது தவிர வேறு வழியில்லைகிடீர். வழியுண்டேல் விளம்பலாமே.

66. நம்மாழ்வார் நாதமுனிகள் ஆளவந்தார் எம்பெருமானார் முதலான ஆசார்யர்களின் தனியன்கள் உலகமெங்கும் எவ்வளவோ சிறப்புற்று வருகின்றனவே; அவை என்றைக்கு அவதரித்தன என்பதுபற்றி ஒருவராவது ஒரு சொல்லாவது எழுதிவைத்திருப்பதுண்டோ? ஸ்வாமி தேசிகனும் அநுஸந்தித்த அந்தத் தனியன்களுக்கு உத்ஸவம் என்கிற வார்த்தை எங்கேனு முண்டோ? தனியனுக்கு உத்ஸவம் என்கிற வார்த்தையே மிக விசித்திரமாக இல்லையா? அதிலும் இந்தச்லோகத்திற்கு உத்ஸவம் என்கிற வார்த்தை என்னே!

67. இந்த பாத்திரத்தனியன் சரித்திரமும் வியாக்யானமும் கொண்டபுத்தகம் வெளிவரப்போகின்றதென்று பிரசுரம் செய்தார்கள். வியாக்கியானம் வேணுமானால், வையமெல்லாம் விஸ்மிதமாகவும் கல்லும் கரையவும் விபுலதமமாக நாமே யெழுதித்தருவோம். சரித்திரம் வெளிவருமென்கிறார்களே, அதைப்பார்க்கத்தான் * நாளேலறியேனென்று பாரித்துக் கிடப்புதோம். அதற்கு எப்படித்தான் பிராணப்ரதிஷ்டை பண்ணுகிறார்களோ, அவ்வதிசயத்தைக் கண்ணுடையார் காணவேணும்.

முடிவில் விண்ணப்பம். இவ்விஷயங்களெல்லாம் நாம் பல வருஷங்களுக்கு முன்பு எழுதி வெளியிட்ட புத்தகங்களின் ஸாரஸங்க்ரஹம். இன்னமும் விரிவாகத் தெரிந்து கொள்ள விருப்பமுள்ளவர்கள் அப்புத்தகங்களையே பெற்றுத் தெரிந்து கொள்க. இந்த பாத்திரத்தனியனுடைய சரித்திரம் விரைவில் வெளிவரப் போகிறதென்று அப்போது பிரசுரம் செய்திருந்தவர்கள் நம்முடைய நிரூபணங்களை யெல்லாம் கண்டபின்பு 'இனிநாம் எதுவுமெழுத வழியில்லை' என்று தேறித் தெளிந்து அந்த சரித்ரப்ரகாசந ப்ரயத்நத்தை விட்டொழித்தார்களென்பது ப்ராமாணிகக்ருதயமே. .... .... ....

## தத்வஜிஜ்ஞாஸுக்களுக்கு விண்ணப்பம்.

திருவெவ்வுளூர் ஸந்நிதியில் அத்யாபகமிராசு அஹோபில ஜீயர் ஸ்வாமிகளைச் சேர்ந்ததாகையால் அவர்கள் நெடுநாளைய வழக்கப்படி ஸ்ரீசைலேச தயாபாத்ரமே ஸேவித்து வந்து, நாளடைவில் நேர்ந்த விபர்யயத்தால் அதை மாற்றி வேறு புதிய பாத்திரம் சொல்லத் தொடங்கின காலத்தில் பல தடவை கலஹங்களுண்டாகி நீதிபதிகளால் நியாயம் செலுத்தப்பட்டிருக்கும் விதம் அனேக ரிகார்டுகளைக் கொண்டு முன்னமே மூதலிக்கப்பட்டிருக்கின்றது. இப்போது ஒரு ரிகார்டு மாத்திரமே இங்கு இதம்ப்ரதமமாய் வெளியிடப்படுகிறது. அதாவது:

"மிஸ்தர் செங்கல்பட்டு ஜில்லா கலெக்டர் அலக்ஜாண்டர் மக்ளீன் ஸாஹேபு அவர்கள். முதல்–இஜத்–ஆசார் வெங்கடரமணய்யர் தாசில்தார் தாலுக்கா பெரியபாளையம்.

தரிவில்லா திருவள்ளூர் தேவஸ்தானத்தில் மாமூல்படிக்கு தெங்கலை மந்திரம் சொல்லாமல் நிருத்திப்போட்டதாய் தெங்கலையார் செய்த பிரியாதைக் குறித்து நீர் விசாரணை செய்து போன மீ 23உயில் எழுதிக்கொண்ட 7வது நெம்பர் போட்ட அர்ஜியையும் அத்துடனே வந்த வாக்குமூலங்களையும் அசூரில் விசாரணை செய்த வாக்குமூலங்களையும் அநுஸரித்து நடந்துவருகிற ஸங்கதிகளை தெரியப்படுத்தலாச்சுது.

2வது திருவள்ளூரிலிருக்கும் தென்கலை ஸுதர்சனுசாரியர் வகையராக்கள் சிலபேர் அசூரில் ஆஜராய் திருவள்ளூர் வீரராகவஸ்வாமியாருடைய தேவஸ்தானத்து முதல் தீர்த்தக்காரராகிய அஹோபில மடம் ரங்கநாத சடகோப ஜீயர் மேல்படி குமாஸ்தா வேதாந்தாசாரி ஷெயூர் தட்டை ராகவாசாரி இவர்கள் 1835ளு ஆகஸ்டு மீ 8உ ராத்திரி 8 மணிக்கு ஷெ வீரராகவஸ்வாமிகள் கஜேந்த்ரமோக்ஷத்துக்காக கருடவாஹநத்தின்பேரில் தோரணை வந்து நின்னபோது அதுக்கு முந்தின தினம் வரைக்கும் ப்ரபந்தம் துடங்குரத்துக்காக நடந்துவந்த மாமூல்படிக்குச் சொல்ல வேண்டிய தென்கலையாருடைய குருமந்த்ரமாகிய ஸ்ரீசைலேச தயாபாத்ரத்தைச் சொல்லாமல் நூதநமாய் .... ப்ரியாது செய்தார்கள் .... ....

.... .... உத்திரவு பண்ணுகிறதென்ன வென்றால் மாமூல் ப்ரகாரம் திருவள்ளூர் தேவஸ்தானத்தில் அஹோபில்மடத்து ஜீயர் ஸ்வாமியிருக்கிறபோது அவரும் அவரில்லாதபோது அவருடைய குமாஸ்தாக்களும் மத்தபேரும் தேசிகர் உத்ஸவம் 11 நாள் தவிர மத்த எல்லா தினங்களிலேயும் மாமூல் ப்ரகாரம் தென்கலை குருவிஷயமான ஸ்ரீசைலேச தயாபாத்ரமென்கிற சுலோகத்தைச் சொல்லி ப்ரபந்தம் தொடங்கவேணும். தேசிகருடைய உத்ஸவம 11 நாளிலே வடகலையாருடைய குரு விஷயமான ராமாநுஜ தயாபாத்ரமென்கிற சுலோகத்தைச் சொல்லி பிரபந்தம் தொடங்க வேணும். இந்த ப்ரகாரம் நாம் தீர்ப்பு செய்திருக்கிறபடியினலே ஷெ ஜீயருக்கும் அவருக்காக ஷெ தேவஸ்தானத்தில் இருக்கிற குமாஸ்தாவுக்கும் இந்த உத்திரவைப் படித்துக் காண்பித்து அது முதல் இந்த ப்ரகாரம் நடந்துக்கொள்ளும்படி திட்டம் செய்து இதுக்கு நகலை தேவஸ்தானம் அமீனுவினிடத்துக்கு அனுப்பிவைக்கவும். இந்த உத்திரவு ப்ரகாரம் ஷெ மடத்து ஜீயர் முதலானவர்கள் நடந்துக்கொண்ட ஸங்கதியை நமக்கு அர்ஜுமூலமாய் ரிபோர்டு செய்யவும். அறியவும்.

1835ளு செப்டம்பர் மீ 24உ மகாம் காஞ்சிபுரம்.

(Sd) A. மெக்ளீன்,
கலெக்டர்."

மத்யஸ்தமஹாநீயர்களே ! இப்படிப்பட்ட ரிகார்டுகளெல்லாம் செத்துப்போனவையாதலால் இவை கொண்டு இப்போது ஷெ தேவஸ்தானத்தில் என்ன ஸாதிக்க முடியுமென்று சிலர் ஏசுகிறார்கள். ப்ராசீந ஸ்திதி எப்படிப்பட்டது என்பதை மத்யஸ்த மநீஷிகள் தெரிந்து கொள்வதற்காகவே இதை அச்சிட்டது.

நூதனபாத்ரதத்வ நிரூபணம் முற்றிற்று.

1 to 38 Pages, Printed at The Kamala Printing Press, 103, Armenian Street, Madras-1.

॥ श्रीरस्तु ॥

श्रीमते हयग्रीवाय नमः ।

अस्मद्गुरुपरंपराभ्यो नमः ।

श्रीकाञ्ची प्रतिवादिभयङ्कर जगदाचार्यसिंहासनाधीश

## श्रीमदण्णङ्गराचार्यकृतिषु

# ॥ श्रीमद्वेङ्कटनाथगुरुस्तोत्रम् ॥

ஸ்ரீகாஞ்சி பிரதிவாதிபயங்கரம்

அண்ணங்கராசாரியர்

இயற்றிய

## ஸ்ரீமத் வேங்கடநாத குரு ஸ்தோத்ரம்.

பொழிப்புரையுடன் கூடியது.

श्रीमान्वेङ्कटनाथार्य इति पद्याक्षरक्रमात् । श्रीमद्वेङ्कटनाथार्यस्तोत्रं वच्मि सतां मुदे ॥

"ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய: கவிதார்க்கிககேஸரீ. வேதாந்தாசார்யவர்யோ மே ஸந்நிதத்தாம் ஸதா ஹ்ருதி." என்கிற தனியனிலுள்ள ஒவ்வொரு அக்ஷரத்தையும் அடைவே ஒவ்வொரு சுலோகத்தின் முதலெழுத்தாகக் கொண்டதான இந்த ஸ்தோத்ரம் நல்லோருள்ளம் கனிய இயற்றப்படுகின்றது.

श्रीमद्वेङ्कटनाथदेशिकमणिश्शेषाद्रिभूषामणेर्घण्टांशः कुशिकात्मजान्वयसुधासिन्धोस्सुधादीधितिः ।
श्रीरामानुजसूरिवर्यकरुणासंप्राप्तविद्योत्करोऽनन्तार्याह्वयसोमसुत्सुतमणिर्मे सन्निधत्तां हृदि ॥ १ ॥

திருவேங்கடமுடையானுடைய திருமணியின் அம்சமாய்த் தோன்றியவரும், விச்வாமித்ர குல திலகரும், கிடாம்பியப்புள்ளாருடைய திருவருளால் ஸகல கலைகளையும் அதிகரிக்கப் பெற்றவரும், அநந்த ஸோமயாஜிகளின் அரும்புதல்வருமான ஸ்ரீமத் வேங்கட நாத தேசிகர் என்னுள்ளத்துள்ளே உறைவாராக. 1

मानातीतमहागुणौघजलधिः मायीभकण्ठीरवः मातङ्गाचलमौलिमण्डनमणेः मान्यो महादेशिकः ।
मग्नान् संसृतिसागरे मितमतीन् मादृग्जनान् रक्षितुं मर्त्याकारमुपेयिवान् गुरुवरो मे सन्निधत्तां हृदि ॥

எல்லைகடந்த சிறந்த குணங்களுக்குக் கடல்போன்றவரும், மாயாவாதிகளாகிற மதயானைகட்குச்சிங்கம்போன்றவரும், தென்னத்தியூரரானதேவப்பெருமாளுடைய திருவருளுக்கு இலக்கானவரும், பிறவிக்கடலுள் அழுந்தித் துளங்குகின்ற நம்போன்றவர்களைக் காத்தருள மானிட வேடம் பூண்டவருமான தேசிகர் என்னெஞ்சினுள்ளே திகழுவேணும். 2

वेतण्डाचलमण्डनस्य वरदस्याङ्घ्री सदा संश्रयन् तस्यैवाद्भुतमाभिरूप्यमनिशं चित्तेऽनुभूय स्वयम्।
वैकुण्ठेऽपि न मेऽभिलाष इति यः प्रोचे महादेशिकः सोऽयं पण्डितमण्डलीपरिवृढो मे सन्निधत्तां हृदि॥

*தேவப்பெருமாளுடைய திருவடிகளையே தஞ்சமாகப்பற்றி, அப்பெருமாளுடைய அற்புதமான அழகை இடைவீடின்றி அநுபவித்து, வைகுண்ட வாஸத்திலும் எனக்கு விருப்பமில்லையென்று (வரதராஜபஞ்சாசத்தில்) அருளிச்செய்த வித்வந்மணியான தேசிகர் என்னுள்ளத்துள்ளுறைக.* 3

कल्पन्ते किल यस्य देशिकमणेः श्रीसूक्तिरत्नोत्कराः सर्वेषामपि देहिनां भवभयोद्विग्नात्मनां मुक्तये।
सोऽयं वेदशिरोगुरुर्यतिपतेस्सिद्धान्तमत्यद्भुतं भूयोभिः कृतिसञ्चयैर्विशदयन् मे सन्निधत्तां हृदि॥ ४॥

*பிறப்பிறப்பு மூப்புப் பிணிகளுக்கு அஞ்சி நடுங்குகின்ற ஸம்ஸாரிகளை வாழ்விக்கவல்ல திவ்ய ஸூக்திகளை யருளிச்செய்தவரும், எம்பெருமானார் தரிசனத்தைப் பலபல திவ்யக்ரந்தங்களினால் நன்கு விளக்கினவருமான தேசிகர் என்மனத்தையே மந்திரமாகக் கொள்க.* 4

टङ्काद्यैर्बहुभिः पुराणगुरुभिः प्रागेव दृष्टं ततः पश्चात् श्रीयुतनाथयामुनयतिक्ष्माभृन्मुखैर्वर्धितम्।
सिद्धान्तं गुरुराडसौ बहुतमैस्स्वग्रन्थबृन्दैर्निजैः संवृद्धं कलयन् कलिप्रमथनो मे सन्निधत्तां हृदि॥ ५॥

*(டங்கத்ரமிட குஹதேவ ப்ரப்ருதய: என்று யதிராஜஸப்ததியில் அருளிச்செய்தபடியே) டங்கர் முதலிய பல முன்னோர்களாலும், ஸ்ரீமந் நாதமுனிகள் ஆளவந்தார் உடையவர் முதலான பின்னாசிரியர்களாலும் ஸநாதமாயிருக்கிற விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தைப் பல உயர்ந்த க்ரந்தங்களினால் பரிபோஷித்தருளின தேசிகர் கலியை வென்று என்னுள்ளத்தைக் கொள்ளை கொள்க.* 5

नाहं बोद्धुमलं भवामि निगमान्तार्यस्य दिव्योक्तिषु प्राज्ञैकानुभवार्हमद्भुततमं दिव्यार्थसारं स्वयम्।
कारुण्येन सुदुर्वचेन भरितस्सोऽयं महादेशिकः सर्वार्थान् स्वयमेव साधु गमयन् मे सन्निधत्तां हृदि॥ ६॥

*தேசிக திவ்யஸூக்திகளின் சீரியபொருள்கள் மிகப்பெரியோர்களாலேயே அறியக்கூடியன வாதலால் நீசனேன் ஸ்வயமாக அறியகில்லேன்; ஆதலால் தேசிகர் தாமே பேரருள்கொண்டு ஸகலார்த்தங்களையும் அடியேனுக்கு உணர்த்தி என்னுள்ளத்துள்ளே வாழ்க.* 6

'धासस्से'-'ढकि लोप'-'ऋत्यक'-'इको यण्'-'कुत्सिते'-'ङस्सिधुट्'
'झर्झुस्'-'झोऽन्त' इतीदृशानि सततं सूत्राणि संक्रन्दताम्।
श्रेयः किंचन नोदियादिति धिया सूक्तीस्सुहृद्या अदात्
यो वेदान्तमहागुरुस्स कृपया मे सन्निधत्तां हृदि॥ ७॥

*உலகில் பலர் வியாகரணம் வாசிப்பதாக இழிந்து (தாஸஸ்ஸே) என்பது முதலான ஸூத்ரங்களை உருப்போட்டுக்கொண்டு அதிலேயே உயிரை விடுகிறார்கள். அன்னவர்களுக்கு ஒரு நன்மையும் விளையமாட்டாதே! என்று திருவுள்ளமிரங்கி அமுதன்ன மொழிகளை அருளிய தேசிகர் என் அகத்தையே தம் அகமாகக்கொள்க.* 7

यः कारुण्यनिधिर्यमाह भगवान् वेदान्तसद्देशिकं येनेदं भुवनं सनाथमभवत् यस्मै नतिः श्रेयसी।
यस्माद्दिव्यसुधोदयस्समभवत् यस्य प्रभावोऽद्भुतः, यस्मिन् सर्वगुणा बभुः स गुरुराण्मे सन्निधत्तां हृदि॥

*கருணைக்கடலாயிருப்பவரும், வேதாந்தாசாரியரென்று அரங்கனருள்பெற்றவரும், இவ்வுலகத்தை ஸநாதமாக்கவல்லவரும், தம்மைத் தொழுமவர்களுக்கு நன்மையளிப்பவரும், அமுதப்பெருக்கான ஸ்ரீஸூக்திகளுக்கு ஆகரமாயிருப்பவரும், அற்புதமான வைபவங்கள் அமைந்தவரும, நற்குணநிதியுமான தேசிகர் என் மனத்தையே கோயில்கொள்க.* 8

कन्यामासि फणीन्द्रशैलशिखरालङ्कारतीर्थोद्दिनि प्रादुर्भूय भवाब्धिमग्नजनतासंरक्षणैकव्रती ।
यः प्रोवाच शताधिकान् सुमधुरान् सारार्थरत्नाकरान् सद्ग्रन्थान् स गुरुर्गुणामृतनिधिर्मे सन्निधत्तां हृदि ॥

புரட்டாசிமாதத்தில் திருவேங்கடமுடையானுடைய அவப்ருதத் திருநாளான திருவோணத்தில், நம் போன்ற ஸம்ஸாரிகளைக் கரையேற்றுதற்காகவே அவதரித்து நூற்றுக்கு மேற்பட்ட நல்ல திவ்யக்ரந்தங்களை யருளிச்செய்த தேசிகர் என் மனத்தை விடார். 9

विश्वत्राणविचक्षणस्स भगवान् घण्टां स्वकीयां शुभां तोताद्र्याह्वयदिव्ययोषिदुदरे न्यस्यन् समा द्वादश ।
प्रादुर्भाव्य यदात्मना विभवनाम्न्यब्दे नभस्ये निजे नक्षत्रे जगतीं ररक्ष स गुरुर्मे सन्निधत्तां हृदि ॥ १० ॥

உலகத்தைக் காத்தருளவல்லவனான எம்பெருமான் (திருமலைமால்) தன்னுடைய திருமணியாழ்வாரைப் பன்னிரண்டு ஆண்டளவும் தோதாரம்மையின் திருவயிற்றில் வாழச்செய்து, பிறகு விபவ வருஷம் புரட்டாசித் திருவோணத்தன்று அவதரிக்கச் செய்து உலகத்தை வாழ்விக்க ஹேது பூதராயிருந்த தேசிகர் என் மனத்தையே உறைவிடமாகக் கொள்க. 10

तातो मे भुवनप्रसिद्धमहिमा विद्यानिषद्यात्मकः यस्य श्रीनिगमान्तदेशिकमणेः श्रीसूक्तिरत्नावलीः ।
आबाल्यान्मम कण्ठभूषणतया विन्यास्यत् अन्यादृशः सोऽयं देशिक आत्मनः करुणया मे सन्निधत्तां हृदि ॥

உலகம்நிறைந்த புகழாளராய்க் கல்வியிற்சிறந்தவரான அடியேனது திருத்தகப்பனார் இளமையிளமை முதலாகவே எனக்கு எந்த தேசிகருடைய திவ்யஸூக்திகளையெல்லாம் கண்டபாடமாக ஆக்கிவைத்தாரோ அந்த தேசிகர் என்னெஞ்சினுள்ளே உறைக. 11

किञ्चिज्ज्ञानमुपेयुषामपि सतां यस्य त्रयीशेखराचार्यस्याद्भुतसूक्तिबृन्दमनघं हृद्यं हि विद्योतते ।
भक्तिं भूरितमां विरक्तिमनघां विज्ञानमुच्चावचं बिभ्राणस्स महागुरुर्गुणनिधिर्मे सन्निधत्तां हृदि ॥ १२ ॥

சிறிது ஞானம்பெற்றவர்களுக்குங்கூட மிக ரஸிக்கும்படியான அமுதமென்மொழிகளை அருளிச்செய்தவரும், ஞானபக்தி விரக்திகள் மலிந்தவருமான தேசிகர் என் மனத்தை யாளவேணும். 12

कल्लोला इव सागरे गुरुवरे यस्मिन् सदा सूक्तयः प्रादुर्भावमनर्गलं जनिजुषां सौभाग्यभूम्ना दधुः ।
सोऽयं सर्वकलाविहारनिलयः सर्वज्ञचूडामणिः सर्वानन्दनसद्गुणौघजलधिर्मे सन्निधत्तां हृदि ॥ १३ ॥

கடலில் அலைகிளர்வதுபோல், நம்முடைய பாக்யவசத்தால் மேன்மேலும் ஸ்ரீஸூக்திகள் பொங்கிவரப்பெற்றவரும், ஸகலகலைகளிலும் வல்லவரும், ஸர்வஜ்ஞரும், ஸத்குணநிதியுமான தேசிகர் என்னுள்ளத்தில் வாஸத்தை ஒருநாளும் விடலாகாது. 13

के वा सन्ति महीतलेऽत्र विपुले वेदान्तसूरेर्गिरस्सर्वास्साधु विमृश्य तस्य हृदयं गाढं ग्रहीतुं क्षमाः ।
सोऽयं देशिकसार्वभौम इह मामेकं कृपावैभवात् स्वीयान्तःकरणज्ञमाशु कलयन् मे सन्निधत्तां हृदि ॥१४॥

இந்நிலவுலகில் தம்முடைய ஸகல திவ்யஸூக்திகளையும் நன்கு ஆராய்ந்து பார்த்துத் தமது ஆழ்ந்த திருவுள்ளத்தைக் கண்டறிய வல்லவர் ஒருவருமில்லையென்கிற குறைதீர, அடியேனொருவன்பால் தமது பேரருளைப் பெருகவிட்டுத் தம்முடைய திருவுள்ளக் கருத்துகளை அறிந்தேனும்படி செய்ய வல்லவரான தேசிகர் என்னுள்ளத்தையே உறைவிடமாகக் கொள்க. 14

सत्यं सत्यमहं ब्रवीमि भुवने नान्योऽवतीर्णो गुरुः चारित्रं परमं पवित्रमतुलास्सूक्तीश्च संदर्शयन् ।
एकोऽयं श्रुतिमौलिदेशिकमणिः सर्वात्मना शोभनः सोऽयं सीमदरिद्रया करुणया मे सन्निधत्तां हृदि ॥

பவித்திரமான சரித்திரம் பொருந்தி, ஒப்பற்ற திவ்யஸூக்திகளை உபகரித்துப் பல படியாலும் சிறப்புப்பெற்றவர் இவரொருவரே என்று ஆணையிட்டுச் சொல்லுதற்கு உரியவரான தேசிகர் எல்லை கடந்த கருணையோடு என்னுள்ளத்துள்ளே உறையவேணும். 15

रीङ्कारं कलयन्ति शीधुकणिकां पीत्वा द्विरेफा वने सोऽहं वेदशिरोगुरोर्हि फणितीः पीयूषकल्पा मुहुः।
पायंपायमनर्गलं विरचये तौर्यत्रिकं चत्वरे सोऽयं सर्वकलानिधिर्गुरुवरो मे सन्निधत्तां हृदि ॥ १६ ॥

கானகத்தில் வண்டுகள் மதுத்திவலையைச் சிறிது பருகிக் களித்து ரீங்காரம்செய்வன; அடியேன் தேசிகருடைய திவ்யஸூக்திகளாகிற திவ்யாம்ருதத்தை வேண்டியமட்டும் பருகிக் களித்து நாற்சந்திகளில் (*மொய்ம்மாம்பூம்பொழில் என்கிற திருவாய்மொழியிற்படியே) ஆடிப்பாடிக் குனிக்கின்றேன்; இப்படி யென்னைக் களிப்பிக்கவல்ல தேசிகர் என்னெஞ்சமே மேவுக. 16

वेदानां पठनं पुराणकथनं स्मृत्यादिसंशीलनं सर्वं यस्य गुरोर्गिरां परिचयैः पुष्णाति शोभां पराम्।
सोऽयं सर्वपथीनधीविलसितो वैराग्यवारांनिधिः श्रीमान् वेदशिरोगुरुः प्रतिकलं मे सन्निधत्तां हृदि ॥

வேதமோதுவதோ, புராணப்ரவசனம் செய்வதோ, தர்மசாஸ்த்ரங்களைப் பரிசிலனை செய்வதோ, மற்றும் எது செய்வதாயிருந்தாலும் தேசிக திவ்யஸூக்திகளில் பரிசயம் இருந்தால்தான் எந்த பேச்சும் பொலிவுபெறும் என்னவேண்டும்படியான ஸ்ரீஸூக்தி வைபவம் வாய்ந்தவரும், எல்லா வழிகளிலும் செல்கின்ற புத்திவிலாஸம் பொருந்தியவரும் மஹாவிரக்தருமான தேசிகர் என்மனத்தையே மன்னியிருக்கவேணும். 17

दान्तिश्शान्तिरिति द्वयं हि सकलैस्संपादनीयो निधिः सोऽयं यस्य वशी स्वभावनियतो लक्ष्मीशसङ्कल्पतः।
वाजिग्रीवकृपाकटाक्षविभवोदञ्चत्प्रभावोज्ज्वलः सोऽयं देशिकतल्लजः स्वकृपया मे सन्निधत्तां हृदि ॥

ஒவ்வொருவரும் அவசியம் ஸம்பாதிக்கவேண்டிய நிதியாகிய சமமும் தமமும் பகவத்ஸங்கல்பத்தாலே இயற்கையாகவே அமையப்பெற்றவரும், ஸ்ரீ ஹயக்ரீவருடைய க்ருபாகடாக்ஷத்தினால் பெருமேன்மைபெற்றவருமான தேசிகர் என் மனத்தினுள்ளே மன்னி வீற்றிருப்பாராக. 18

तातोऽयं तनयोऽयमेष सहजस्सैषा प्रसूः पत्न्यसौ क्षेत्रं मामकमेतदित्यनवधि प्रोज्जृम्भमाणा तृषा।
सर्वा मे समभूद्यदीयफणितिष्वेव, प्रसिद्धप्रथस्सोऽयं निस्तुलवैभवो गुरुवरो मे सन्निधत्तां हृदि ॥ १९ ॥

* "ஆசைவாய்ச்சென்ற சிந்தையராகி அன்னையத்தனென் புத்திரர்பூமி வாசவார்குழலாளென்றுமயங்கி" என்னுமாபோலே பலவிஷயமாக விளையக்கடவதான விருப்பமெல்லாம் எனக்கு வேறொன்றிலும் செல்லாமல் தம்முடைய திவ்யஸூக்திகளிலேயே செல்லுமாறு அருள்புரிந்த தேசிகர் என்னெஞ்சினுள்ளே வாழ்க. 19

चार्वाकादिमदुर्मतान्धतमसध्वंसार्थमुद्यन् रविः श्रीमद्वैष्णवमण्डलीकुवलयोल्लासाय भास्वान् विधुः।
सोऽयं वेदशिरोगुरुस्स भगवानित्येवमत्यादरात् सर्वैस्साधुगणैः प्रशस्यमहिमा मे सन्निधत्तां हृदि ॥ २० ॥

சார்வாகம் முதலிய துர்மதங்களாகிற இருளை அகற்றுவதற்குத் தோன்றின ஸூர்யன் என்னத்தகுந்தவரும், ஸ்ரீவைஷ்ணவ மண்டலமாகிற ஆம்பலோடையை மலர்த்துவதற்காக விளங்குகின்ற திங்கள் என்னத்தகுந்தவருமான தேசிகர் என்மனத்தே வாழ்க. 20

यज्ञे धातुरुदित्वरस्स वरदः श्रीहस्तिशैलेश्वरः स्वीये वाहनमण्डपे परमया प्रीत्या यमास्थापयन्।
वारंवारमनुग्रहं प्रकटयन् विद्योतते, तादृशप्रख्यातामितवैभवो गुरुवरो मे सन्निधत्तां हृदि ॥ २१ ॥

அயன்செய்த அயமேத வேள்வியில் அவதரித்த பேரருளாளனால் தன்னுடைய வாஹனமண்டபத்தில் எழுந்தருளப்பண்ணுவித்து அடிக்கடி பஹுமானிக்கப்பெறுகின்ற தேசிகர் என்னுள்ளத்தினுள்ளே உறைவாராக, 21

वर्गे वैष्णवशुद्धसन्ततिजुषां श्लाघ्यान्, अथान्यैरपि प्राज्ञैर्भूरितमैः प्रशस्य विभवान् ग्रन्थान् गरिष्ठान् बहून्।
श्रीमद्वाजिमुखस्य दिव्यकृपया नित्यं सृजन् निर्मलप्रज्ञो देशिक एष दोषविधुरो मे सन्निधत्तां हृदि ॥ २२॥

ஸ்ரீவைஷ்ணவ ஸமூஹம்போலே மதாந்தரஸ்த பண்டித ஸமூஹமும் கொண்டாடும்படியான அரிய பெரிய நூல்களை ஹயக்ரீவப்ரஸாதத்தினால் அநவரதம் அருளிய தேசிகர் என்மனத்தே வாழ்க. 22

योग्यानामयमग्रगण्य इति भुव्याख्यामिहेप्सुर्जनः यस्याचार्यमणेर्विशुद्धफणितिष्वत्यादरं प्राप्नुयात् ।
सोऽयं श्रीशतदूषणीमुखमहाग्रन्थावलीख्यापितप्रज्ञाशेवधिरादरेण महता मे सन्निधत्तां हृदि ॥ २३ ॥

யோக்யர் என்று பெயர்பெற விரும்புமவர்களெல்லாரும் விரும்பிக் கற்றுத் தீரவேண்டும்படியாக சததூஷணீ முதலிய சிறந்த பல க்ரந்தங்களை யருளிச்செய்து ஞானப்பெரும்புகழ் படைத்த தேசிகர் என்னகத்தினுள்ளே அன்புடன் அமர்ந்திடுக. 23

मेदिन्यामिह सर्वतः प्रसृमरा विख्यातिरन्यादृशी यस्य श्रीनिगमान्तदेशिकमणेर्नित्यं समुज्जृम्भते ।
यस्याहुस्सकलेऽपि तन्त्रनिचये स्वातन्त्र्यमत्यङ्कुशं श्रीमानेष गुणालयो गुरुवरो मे सन्निधत्तां हृदि ॥

இந்நிலவுலகம் முழுதும் பரவிய பெரும்புகழ் படைத்தவரும், ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரரென்று விருதுபெற்றவருமான தேசிகர் என்மனத்தே குடிகொண்டிருக்கவேணும். 24

सन्देहान् सकलान् हतान् विदधतः पीयूषसन्देहदान् गङ्गापूरसधर्मणश्शुभतमान् दिव्यान्निबन्धान् बहून् ।
उद्घाट्य क्षितिमण्डलं निरुपमं निष्कल्मषं चादधत् वेदान्तार्यगुरूत्तमः करुणया मे सन्निधत्तां हृदि ॥ २५॥

சாஸ்த்ரார்த்தங்களில் ஸகல ஸந்தேஹங்களையும் போக்கவல்லவைகளும், 'தேவாம்ருதமோ இவை!' என்னும்படியான ஸந்தேஹத்தைப் பயக்கவல்லவைகளும் கங்காப்ரவாஹ ஸஹோதரங்களுமான பல திவ்யக்ரந்தங்களையருளி இவ்விருள்தருமா ஞாலத்தையே தெருள் தருமாஞாலமாக்கின தேசிகர் என்மனத்தே வாழ்க. 25

नित्याराधनपेटिकां मम गृहे धन्यां वितन्वंश्चिरात् सर्वासामपि संपदां मम कुले बीजायमानो महान् ।
ज्ञानानुष्ठितिसंपदा सुमहितः कण्ठीरवो वादिनां त्रय्यन्तार्यमहागुरुश्शुभमतिर्मे सन्निधत्तां हृदि ॥ २६ ॥

அடியேனுடைய இல்லத்தில் கோயிலாழ்வாரில் அர்ச்சாமூர்த்தியாக நெடுநாளாகவே எழுந்தருளியிருந்து அநுக்ரஹிப்பவரும், எனது குடும்பத்தில் நேர்கின்ற ஸகலவித ஸம்பத்துக்களுக்கும் முதல் தனிவித்தாக அமைந்தவரும், ஜ்ஞாநாநுஷ்டாந ஸம்பத்ஸம்ருத்தரும் பரவாதிசிங்கமுமான தேசிகர் என்மனத்தே மன்னுக. 26

धन्यो नान्य इहास्ति केवलमहं धन्याग्रणीरित्यमुं गर्वं निर्वहति प्रसिद्धमहिमा यो देशिको मामकम् ।
सोऽयं धन्यतमां धरां विदधतीस्सूक्तीरमेयास्सृजन् श्रीमान् वेदशिरोगुरुर्मदजुषो मे सन्निधत्तां हृदि ॥

யாரொருவனை குறையற்றவனென்றும் என்னைப்போன்ற நிறைவாளர் மற்றொருமில்லையென்றும் அடியேன் செருக்குக்கொள்வதற்குக் காரணபூதரும், இப்பூமண்டலம் க்ருதார்த்தமாகும்படி அளவற்ற திவ்யஸூக்திகளை அருளிச்செய்தவருமான தேசிகர் என்னுள்ளத்துள்ளே உறைவாராக.

ताम्यद्भिर्बहुधा जनैः परिवृते भूमण्डलेऽस्मिन् अहं यस्यानुग्रहपात्रतामनितरप्राप्यामिह प्राप्नुवन् ।
सन्तुष्टस्सततं प्रफुल्लहृदयो दुःखोक्तिवैदेशिको वर्ते, सोऽयममेयधीर्गुरुवरो मे सन्निधत्तां हृदि ॥ २८ ॥

பலவகையாக ச்ரமப்பட்டுக் கொண்டிருக்கின்ற ஜனங்களே மலிந்திருக்கின்ற இந்நிலவுலகில் அடியேனொருவனையே இதர துர்லபமான தம் அருளுக்குக் கொள்கலமாக்கி, எப்போதும் உள்ளங்

கனிந்து மகிழ்ந்தேயிருப்பவனாகவும் துயரின் ப்ரஸக்தியே அற்றவனாகவும் என்னை ஆக்கிவைத்தருளி யிருக்கின்ற தேசிகர் என் மனத்தில் நித்யஸந்நிதி பண்ணவேணும். 28

सद्वृन्दैस्सह नित्यवासरसिकं संख्यातिगैर्भावुकैः संश्राव्योक्तिपरम्परं च कृपया यो मां व्यधाद्देशिकः।
सोऽयं द्राविडसंस्कृतादिसकलब्राह्मीषु कूलंकषप्रज्ञो वेदशिरोगुरुर्मधुरवाक् मे सन्निधत्तां हृदि ॥ २९ ॥

அடியேனுக்கு எப்போதும் ஸத்ஸஹவாஸமே நேரும்படியாகவும், எண்ணிறந்த ரஸிகமஹா ஜனங்கள் கேட்டுக் களிக்குமாறு சொற்பொழிவாற்றும் வல்லமையுண்டாம்படியாகவும் ஆக்கிய ருள்பவரும் வடமொழி தென்மொழி வல்லவருமான தேசிகர்க்கு என் மனமே கோயிலாகவேணும். 29

दारिद्र्यं क्षपयन् यशो विशदयन् विज्ञानमुज्जृम्भयन् आचारं परिपोषयन् शुभमतिं सर्वत्र संवर्धयन्।
भक्तिं मेदुरयन् हरौ, किमधिकैः? सर्वान् गुणान् जृम्भयन् श्रीमद्वेदशिरोगुरुर्महितवाक् मे सन्निधत्तां हृदि॥

(முன்பு ஒரு ப்ரஹ்மசாரிக்குப் போல் நமக்கும்) ஏழைமையைப் போக்கிப் புகழை விளைத்து நல்ல றிவை வளர்த்தி நன்னடத்தையை நல்கி நல்ல புத்தியைச் செழிப்பித்து பகவத் பக்தியைப் பெருக்கி ஸகல குணபூர்த்தியையுமுண்டாக்கி யருளவல்லவரான தேசிகர் என் மனத்தையே குடிகொள்க. 30

हृद्यैर्नित्यमवद्यगन्धविधुरैरुच्चावचैर्मामकग्रन्थैर्भूमिमिमां सदा सुरभयन् वेदान्तसूरिर्गुरुः।
पूर्वाचार्यसदुक्तिरत्नसततास्वादैकसक्ताशयं कुर्वन्मां कमनीयदिव्यवपुषा मे सन्निधत्तां हृदि ॥ ३१ ॥

வித்வன்மனோஹரங்களும் குற்றமற்றவைகளுமான பலவகை நூல்களை அடியேன் இயற்றி இவ்வுலகை உகப்பிக்கும்படியாகவும், பூர்வாசார்யர்களின் திவ்யஸூக்திகளையே இடைவீடின்றி அநுபவித்துக் கொண்டிருக்கும்படியாகவும் அருள்செய்து வருகின்ற தேசிகர் தமது அழகிய திரு வுருவத்தோடு என் மனத்தே திகழ்க. 31

दिव्याकारजितस्मरः सुकविताचातुर्यलीलागृहं शुद्धानुष्ठितिकेलिसद्म भगवद्भक्त्याकरोऽत्यद्भुतः।
सन्दिग्धार्थविनिर्णयेषु चतुरस्सर्वार्थसिद्ध्यादिकानेकग्रन्थकृदेष देशिकमणिर्मे सन्निधत्तां हृदि ॥ ३२ ॥

மன்மதனிலும் விஞ்சிய வடிவழகார்ந்தவரும் நல்ல கவித்வ சக்தி பொருந்தியவரும் பரம பவித்திரமான நடத்தையுடையவரும் பகவத் பக்திவாய்ந்தவரும், தெளியவேண்டிய அர்த்தங்களை தெளிவிக்கவல்லவரும், ஸர்வார்த்த ஸித்தி முதலிய பல சிறந்த நூல்கள் பயந்தவருமான தேசிகர் என்னுள்ளம் விட்டகலாதிருக்கவேணும். 32

इत्थं वादिभयङ्करवंशीयाण्णङ्करार्यसंकलितम्। श्रीमद्वेङ्कटनाथस्तोत्रं पठतां समृद्धिरखिला स्यात् ॥

इति श्रीकाञ्ची प्रतिवादिभयङ्कर अण्णङ्गराचार्यकृतिषु
श्रीमद्वेङ्कटनाथगुरुस्तोत्रम् समाप्तम् ॥

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதிபயங்கரம்

அண்ணங்கராசாரியர்

இயற்றிய

ஸ்ரீமத் வேங்கடநாத குருஸ்தோத்ரம் முற்றுப்பெற்றது.

ஸ்ரீ விலாஸம் பிரஸ், ஸ்ரீரங்கம்

ஸ்ரீ:

# வாதவிவாத நூல்களின் அறிக்கை.

ஸ்ரீமான் திருவரங்கம் திருமலை தாதாசாரிய ரென்கிற D. T. தாதாசாரியருடைய தருக்திகளையும் அவரைப்போன்ற மற்றும் சிலருடைய தருக்திகளையும் கண்டித்துப் பத்தெட்டு வருஷகாலமாக P. B. A. ஸ்வாமியாலும் இதர பண்டிதர்களாலும் வெளியிடப்பட்டுள்ள க்ரந்தங்கள் கீழ்க்கண்டவை. 4—0—0 அனுப்புகிறவர்களுக்கு இப்புத்தகங்களெல்லாம் புக்போஸ்டில் அனுப்பப்படும். நேரில் விரும்புமவர்களுக்கு புத்தகம் ஒன்றுக்கு இரண்டணா வீதம் பெற்றுக் கொடுக்கப்படும்.

இதில் (*) மார்க்கு இட்ட புத்தகங்கள் மன்னார்குடி ஸ்வாமி ஸ்ரீரங்கம் ஸ்வாமி முதலான இதர பண்டிதர்களால் வெளியிடப்பட்டவையாதலால் ஒன்றிரண்டு பிரதிகளே காணக்கிடைக்கும்.

## புத்தகங்களின் ஜாபிதா.

ரஸிகரஸாயனம்
வித்வத்ஸம்வதிக பூஷணம்
தத்வஹிதோபதேசம்
துவரைப்பிரான் திருவருள்
(கோதைபோலுமாராய்ச்சி)
வாத்ஸல்யார்த்த ப்ரகாசிகா
அபிநவதயா சதகம்
ஸஹ்ருதயஸௌபாக்யம்
ப்ரணதிவிமுகார்த்தபரிசீலனம்
ஸபாபுஜங்கீஸர்வஸ்வம்
ந்ருஸிம்ஹாவதாரஹேது நிர்ணயம்
பாடசோதந பரீக்ஷா
அதிஸ் ஸர்வத்ரவர்ஜித:
ந்யாஸ திலக ஸூக்தி விமர்ச:
சாஸ்த்ரார்த்த சந்த்ரிகா 1 முதல் 20
ஸத்ஸம்ப்ரதாய பரித்ராணம்
ஸ்ரீசைலேசமந்த்ர ப்ரபாவம்
ப்ரஹ்மவ்யாப்தி பரிஷ்க்ரியா
ஸமஸ்யமாநோக்தி ஸௌஷ்டவ விமர்சம்
தேசிகஸூக்தி ஜயத்வஜமாலா
தேசிகஸூக்தி பரிமளம்
நான்கண்ட நல்லது
மெய்ப்பொருள் வாழ்ச்சி
ஸதுபதேச சிக்ஷா
ந்ருஸிம்ஹப்ரியா ஸமீக்ஷா
ஸ்ரீராமாநுஜன் தனிமலர் - 2
விபவாவதாரசோகதத்வம்
வைதிக ஸௌபாக்யம்
அத்புத சக்தி
ஸத்புருஷ ஸமாராதனம்
உத்யாந சததூஷணி
வைதிக வித்வதாபரணம்
டிெ அநுபந்தம்
மதிரோசக்ஷண விசாரங்கள்
வைதிகமநோஹரா வியாஸங்கள்.
* தேசிக ப்ரபந்த வுரையாராய்ச்சி
* நற்பொருள் விளக்கம்
* ஸ்ரீமட ஸௌபாக்யம்
* மடத்துக்கு முப்பது
* புஷ்மத்ஸூக்தி ஸௌரபம்
* மடவித்வத் விபூஷணம்
* உத்யாந ஸம்வாதம்
* உத்யாந சிக்ஷா (1)
* டிெ (2)

இவை கீழ்த்திருப்பதி வடவண்டைமாடவீதி, P. B. ரங்கஸ்வாமி திருமாளிகையிலும் மற்றும் புத்தகக்கடைகளிலும் கிடைக்கும்.

முக்கியமான அறிவிப்பு:—D. T. தாதாசாரியர் வெளியிட்டுவரும் வந்தனமாலைகள் வந்தனமாலையாகவே முடியுமென்பது பண்டித வுலகம் நிச்சயித்திருப்பதே. காஞ்சீபுரம் க்ரந்தமாலா ஆபீஸில் தங்கள் பெயரைப் பதிவுசெய்து கொள்ளுமவர்களுக்கு மறுப்புப் புத்தகங்கள் யாவும் தொடர்ச்சியாக அனுப்பப்படுகின்றன.

இப்படிக்கு,
**M. பார்த்தஸாரதி.**
5-ெந. தியாகப்பமுதலி தெரு, மதறாஸ் 10.